# மாணவர்

# கட்டுரைகள்

தரம்

7-8

இடைநிலை வகுப்புக்களில் பயிலும் மாணவர்களின் எழுத்தாற்றலையும், மொழி அறிவையும் விருத்தி செய்யும் வகையில் ஆக்கப்பெற்ற கட்டுரைத் தொகுப்பு.

ஆக்கம் :

**இலக்கிய வித்தகர்**

**கவிஞர் த. துரைசிங்கம்** B.A. (Hons), Dip.in. Ed.

கல்விப் பணிப்பாளர் (ஓய்வு)

வெளியீடு :

*ஸ்ரீ லங்கா புத்தக சாலை,*

234, காங்கேசன்துறை வீதி,

யாழ்ப்பாணம்.

விலை : ரூ.90/=

## நூல் விவரக் குறிப்பு


| | |
|---|---|
| நூல் | : மாணவர் கட்டுரைகள் |
| ஆக்கம் | : கவிஞர் த. துரைசிங்கம் |
| முதற் பதிப்பு | : மார்ச், 2002. |
| பதிப்புரிமை | : நூலாசிரியருக்கு |
| வெளியீடு | : ஸ்ரீ லங்கா புத்தகசாலை<br>234, காங்கேசன்துறை வீதி,<br>யாழ்ப்பாணம். |
| விலை | |
| கொழும்பில் அச்சிட்டு வெளியிடுவோர் | : லங்கா புத்தகசாலை,<br>F.L.1.14 டயஸ் பிளேஸ்,<br>குணசிங்கபுர,<br>கொழும்பு - 12.<br>தொலைபேசி 341942 |


1

# நான் விரும்பும் பெரியார்

ஈழநாடு பெற்றெடுத்த பேரறிஞர்கள் பலர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சுவாமி விபுலாநந்தர். அவரே நான் விரும்பும் பெரியார் ஆவார். தமது வாழ்நாள் முழுவதும் துறவறத்தில் நின்று தமிழ் வளரத் தவம் புரிந்த பெருந்தகை அவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் இலங்கைப் பல்கலைக்கழகத்திலும் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர். அவரது வாழ்வு ஒப்பற்றது.

மீன்பாடும் தேன் நாடு என்று போற்றப்படுவது மட்டக்களப்பு. அங்கே காரேறு மூதூரில் சாமித்தம்பிக்கும் கண்ணம்மைக்கும் அருந்தவப் புதல்வராக 1892 ஆம் ஆண்டு பங்குனி மாதம் இருபத்தொன்பதாம் திகதி இவர் பிறந்தார். தாய், தந்தையர் இவருக்கு மயில்வாகனம் எனப் பெயர் சூட்டினர்.

மயில்வாகனம் இளமையில் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும்மொழிகளையும் கற்றார். ஆசிரியர் பயிற்சி பெற்றார். விஞ்ஞானக் கல்வியில் நாட்டம் கொண்டார். பௌதிக சாஸ்திரத்தில் பி.எஸ்.சி. பட்டமும் பெற்றார். தமிழியற் புலமை வாய்ந்த இவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பண்டிதர் பட்டத்தையும் பெற்றார்.

யாழ்ப்பாணம் புனித பத்திரிசியார் கல்லூரியில் ஆசிரியராகவும், மானிப்பாய் இந்துக் கல்லூரியில் அதிபராகவும் பணியாற்றினார். மயில்வாகனம் தமது ஆசிரியப் பணியைச் சிறப்பாக ஆற்றிய காலத்தில் அவரது உள்ளம் துறவு வாழ்க்கையைப் பெரிதும் விரும்பியது. இதன் காரணமாக இவர் இராமகிருஷ்ண சங்க மடத்தைச் சேர்ந்து தமது முப்பதாவது வயதில் பூரண துறவியானார். மயில்வாகனம் என்னும் இளமைப் பெயரைத் துறந்து பிரபோதசைதன்யர் என்னும் பெயரைப் பெற்றார். பின்னர் தமது முப்பத்திரண்டாவது வயதில் குருப்பட்டம் பெற்றுச் சுவாமி விபுலாநந்தர் என்னும் திருநாமத்தைப் பெற்றார்.

சுவாமிகள் கிழக்கிலங்கையின் கல்வி வளர்ச்சி கருதி இராமகிருஷ்ண சங்கத்தின் மூலம் பல பாடசாலைகளை நிறுவினார். அவற்றின் மூலம் கல்விப் பயிர் செழிக்க வழி செய்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் முதற் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிப் பலரதும் பாராட்டுதல்களைப் பெற்றார். பின்னர் இமயமலைச் சாரலிலுள்ள மாயாவதித் தவப்பள்ளியில் தங்கியிருந்த காலத்தில் "பிரபுத்த பாரதம்" என்னும் பத்திரிகையின் ஆசிரியராகப் பணியாற்றினார். அங்கிருந்து மீண்டு இலங்கைப் பல்கலைக்கழகத்தின் முதற் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றினார். இக்காலத்திற்றான் பதினான்கு ஆண்டுகளாக ஆராய்ந்து எழுதிய "யாழ் நூல்" என்னும் ஒப்பற்ற நூலை அடிகளார் அண்ணாமலை நகரில் திருக்கொள்ளம் புத்தூர்க் கோயிலில் பேரறிஞர்கள் பலர் முன்னிலையில் அரங்கேற்றினார். ஒப்பற்ற இவ் ஆராய்ச்சி நூலை அடிகளார் எழுதியதன் மூலம் இசைத் தமிழுக்கு இணையிலாத் தொண்டாற்றியுள்ளார்.

எழுத்தாற்றல், பேச்சாற்றல், கவிபுனையும் ஆற்றல் அனைத்தும் பெற்ற அடிகளார் பல்வேறு ஆராய்ச்சிக் கட்டுரைகளையும், கவிதைகளையும், நூல்களையும் ஆக்கியுள்ளார். "ஈசன் உவக்கும் இன்மலர் மூன்று", கங்கையில் விடுத்த ஓலை ஆகியன அவரது கவித்துவத்துக்குச் சிறந்த சான்றுகளாகும். சுவாமிகளின் ஆராய்ச்சித் திறனுக்கு யாழ் நூல் சான்று பகருகிறது. நாடகத் துறையில் அடிகளார் பெற்றிருந்த ஆற்றலுக்கு மதங்க சூளாமணி என்னும் நூல் ஏற்ற சான்றாகும்.

"இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழுக்கும் ஒப்பற்ற தொண்டாற்றிய சுவாமி விபுலாநந்தரை முத்தமிழ் முனிவர் என்று அறிஞர் உலகு போற்றுகின்றது. ஈழம் தொட்டு இமயம் வரை புகழ் பரப்பிய சுவாமி விபுலாநந்தரின் நாமம் தமிழ் உள்ளவரை என்றும் நிலைத்து நிற்கும் என்பது திண்ணம். அவரால் நமது ஈழநாடு என்றும் பெருமை பெறும் என்பதில் ஐயமில்லை.







# நான் வளர்க்கும் மிருகம்

மஞ்சள் நிறம், மேலெங்கும் சடைகள், நீண்ட உடல், பார்த்தோரைப் பயமுறுத்தும் கண்கள், இவை அத்தனையும் கொண்ட அழகுத் தோற்றம் உடையது "ஜிம்மி". அதுவே எங்கள் வீட்டு நாய். நான் அன்புடன் வளர்க்கும் மிருகமும் அதுதான். எங்கள் வீட்டுக் காவற்காரனாக அது விளங்குகிறது. நன்றி மிக்க ஜிம்மிக்குத் தற்போது வயது மூன்று. அதனை எங்கள் அப்பா கொழும்பிலிருந்து சிறுகுட்டியாகக் கொண்டு வந்தார். அதற்கென வீட்டு முற்றத்தில் கூண்டு அமைத்து அதில் விட்டு வளர்த்தோம். ஜிம்மிக்குத் தினந்தோறும் நல்ல உணவு கொடுப்போம். இறைச்சி என்றால் அதற்கு நல்ல விருப்பம்.

அதற்கென எங்கள் அண்ணா தனியாக இறைச்சி வாங்கி வந்து வைப்பார். அண்ணா தற்போது கொழும்பு பல்கலைக் கழகத்திற் படிக்கிறார். அதனால் கொழும்பு சென்று விட்டார். இதனால் ஜிம்மியை வளர்க்கும் பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டேன்.

நான் தினந்தோறும் காலையில் ஜிம்மியைக் குளிப்பாட்டுவேன். அதன் பின்னர் அதற்கு உணவு கொடுப்பேன். ஜிம்மி என்று அழைத்தாற்போதும் அது துள்ளிக் குதித்து ஓடி வரும். ஆனால் அதனை வீட்டுப் படலைக்கு வெளியே செல்ல நான் விடுவதில்லை. பகல் நேரத்தில் அதனைக் கூண்டில் அடைத்து விடுவேன். நான் பாடசாலைக்குச் சென்று வந்ததும் ஜிம்மிக்கு உணவு கொடுப்பேன். நான் வீட்டில் இல்லாத வேளைகளில் என் அம்மா ஜிம்மிக்கு உணவு கொடுப்பார்.

எங்கள் வீட்டுக்கு வருவோருக்கு ஜிம்மியைக் கண்டாற் பயம். அது குரைக்கும் தொனியைக் கேட்டே சிலர் ஓட்டம் பிடித்து விடுவர். ஜிம்மியை நாங்கள் இரவிற்றான் கூண்டிலிருந்து வெளியே விடுவோம். அது இரவு முழுவதும் வீட்டைச் சுற்றிச் சுற்றி வரும்; காவல் காக்கும்.

மாலை வேளைகளில் நான் ஜிம்மியுடன் முற்றத்தில் விளையாடுவேன். பந்தை உருட்டி நான் விளையாடும் போது அதுவும் என்னுடன் சேர்ந்து ஓடிவரும். பந்தை வாயாற் கௌவிக் கொண்டு ஓடும். அதைப்பார்க்க எனக்கு மிக்க ஆனந்தம். எங்கள் வீட்டில் உள்ளோர் ஜிம்மி மீது மிக்க அன்புள்ளவர்கள். அவர்களைக் கண்டதும் அது வாலைக் குழைத்துத் துள்ளி எழுந்து பாய்ந்து விளையாட்டுக் காட்டும்.

நான் ஜிம்மியை விரும்பி வளர்க்கிறேன். அதனை எனது தோழனாகக் கருதுகிறேன். அதற்கு உணவு கொடுக்காது நான் உணவு உண்பதில்லை.

ஞாயிற்றுக் கிழமைகளில் நான் ஜிம்மியை சங்கிலியில் பூட்டிக் கடற்கரைக்கு அழைத்துச் செல்வேன். அங்கு உலாவ வருவோர் எங்களைப் பார்த்துப் பார்த்துப் போவார்கள். என் அன்புத் தோழனான ஜிம்மி என்னைக் காணாவிட்டால் மிக்க கவலையுடன் படுத்திருக்கும். என்னைக் கண்டதும் உரக்கக் குரைத்துத் தனது மகிழ்ச்சியைத் தெரிவிக்கும். என் மீது மிக்க அன்புள்ள ஜிம்மியை யான் பெரிதும் விரும்புகிறேன்.





## எனது ஊர்

இயற்கை அன்னையின் எழில் வனப்பையெல்லாம் கொண்டு விளங்கும் பருத்தித்துறை என்பதே எனது ஊராகும். முன்னர் இங்கு வாழ்ந்த விவசாயிகள் தமது முக்கிய பயிராகப் பருத்தியைப் பயிரிட்டு அதன் மூலம் பெரும் வருமானத்தைப் பெற்று வாழ்ந்தனர். இதன் காரணமாகவே எனது ஊருக்குப் இப் பெயர் ஏற்பட்டது என்பர்.

சகல இயற்கை வளங்களையும் தன்னகத்தே கொண்டு பெருமையுடன் விளங்குவது எனது ஊர். எனது ஊரில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட வீடுகள் உண்டு. இங்கு பல சமயங்களையும் சேர்ந்தோர் வசிக்கிறார்கள். விவசாயிகள்,



தொழிலாளர்கள், உத்தியோகத்தர்கள், வர்த்தகர்கள் எனப் பல்வேறு தொழில் புரிவோர் எனது ஊரில் ஒற்றுமையுணர்வுடன் வாழ்கிறார்கள்.

இங்கு பல பாடசலைகள் உண்டு. பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் இப் பாடசாலைகளில் கல்வி பயில்கிறார்கள். கல்வியில் இவர்கள் மிக்க முன்னேற்றமுடையவர்களாக விளங்குகிறார்கள்.

எனது ஊரில் சனசமூகநிலையங்கள், வைத்தியசாலை, தபாற்கந்தோர், இளைஞர் மன்றங்கள், மாதர்சங்கம், உதவி அரசாங்க அதிபர் பணிமனை போன்ற சேவைத் தலங்கள் சிறப்புற மக்கள் பணிபுரிகின்றன. வணக்கத் தலங்கள் பல எனது ஊரில் உள்ளன. அவை பல்வேறு சமயங்களைச் சார்ந்தவை. அவை எனது ஊரின் அழகுக்கு அழகு செய்கின்றன. அல்லற்படும் மக்களுக்கு ஆறுதல் அளிக்கின்றன.

இயற்கை அன்னையின் மிகப் பெரும் கொடையாக விளங்கும் பரந்த கடலை அடுத்து எனது ஊர் அமைந்துள்ளது. இங்குள்ள துறைமுகம் வரலாற்றுப் பெருமை பெற்றது. இப்பரந்த கடல் தரும் செல்வங்களோ அளவற்றவை. மாலை வேளைகளில் பெருந்தொகையானோர் பருத்தித்துறைக் கடற்கரைக்கு உலாவச் செல்கிறார்கள். சிறந்த பொழுதுபோக்குக்கு இக் கடற்கரை பயன்படுகிறது.

எனது ஊர் மக்கள் பொருளாதாரத்தில் சிறந்து விளங்குகிறார்கள். சகலதுறைகளிலும் எனது ஊர் முன்னேற்றமடைந்து வருகிறது. இது குறித்து யான் பெருமையடைகிறேன்.





## நான் பார்த்த திருவிழா

நயினாதீவு ஸ்ரீ நாகபூசணியம்மன் ஆலயத்தில் அன்று தேர்த்திருவிழா. அதிகாலை ஆறுமணிக்கு நானும் என் அப்பாவும் புங்குடுதீவிலிருந்து புறப்பட்டோம். குறிகாட்டுவான் துறைமுகத்தைச் சென்றடைந்தோம். அங்கு ஆயிரக்கணக்கான மக்கள் கியூ வரிசையில் நின்றுகொண்டிருந்தார்கள். நாங்களும் கியூ வரிசையில் நின்றோம். அரைமணி நேரத்தின் பின் மோட்டார்ப் படகொன்றில் ஏறினோம். சரியாக காலை ஏழு மணிக்கு அம்பாள் ஆலயத்தைச் சென்றடைந்தோம்.

நாங்கள் கோயிற் கோபுர வாயிலைச் சென்றடைந்த போது மூன்று அழகிய தேர்கள் அங்கு காட்சியளித்தன. பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் நாலாபுறமும் திரண்டு நின்றனர். சிறிது நேரத்தில் பக்தர்களின் அரோகரா கோஷம் வான் முட்ட ஒலிக்க, மேளவாத்தியங்கள் முழங்க, அம்பிகை அழகிய பீடத்தில் ஆரோகணித்துக் கோபுர வாயில் வழியாக வந்து கொண்டிருந்தார். பக்கத்தில் பிள்ளையாரும் முருகப் பெருமானும் அழகொளிரக் காட்சியளித்தனர்.

கோபுர வாயிலைக் கடந்ததும் பிள்ளையார் முன்னே சென்று சிறிய தேரில் எழுந்தருளினார். ஸ்ரீ நாகபூசணியம்பாள் தேர் மண்டபத்தையடைந்து அழகிய பெரிய சிற்பத் தேரில் ஆரோகணித்தார். பின்னே நின்ற மற்றொரு தேரில் முருகப்பெருமான் எழுந்தருளினர். மூன்று தேர்களையும் சூழப் பக்தர்கள் நீக்கமற நிறைந்து நின்றனர். எங்கும் அரோகரா கோஷம் ஒலித்தவண்ணமாகவே இருந்தது.

சிவாச்சாரியர்கள் பூசைகள் நடத்தி பஞ்சாராத்தி காட்டியபோது கடலெனத் திரண்டிருந்த பக்தர்கள் உச்சிமேற் கைகுவித்துப் பக்திப் பரவசத்துடன் வழிபட்டனர். பின்னர் மூன்று தேர்களின் முன்பும் குவிக்கப்பட்டிருந்த தேங்காய்களை எடுத்துப் பக்தர்கள் "பட பட" வென்று அடித்தனர். சிறிது நேரத்தில் மணி ஒலித்ததும் தேர் இருப்பிடத்தை விட்டு மெல்ல நகரத் தொடங்கியது. அப்போது நேரம் சரியாக எட்டு மணி என்பதை



எனது கடிகாரம் காட்டியது. தேரின் பின்னே பெருந்திரளான அடியார்கள் அங்கப்பிரதட்சணம் செய்தும் அடியழித்தும் கற்பூரச் சட்டிகளை ஏந்திய வண்ணமும் சென்று கொண்டிருந்தனர். அத்துடன் அம்பிகை அடியார்களின் பஜனைக் குழுவும் பின்தொடர்ந்தது.

தேர்கள் தெற்கு, மேற்கு, வடக்கு வீதி வழியாக மெல்ல மெல்லச் சென்று பகல் பத்து மணியளவில் தேர் மண்டபத்தை வந்தடைந்தன. தேர் இருப்பிடத்தையடைந்ததும் அர்ச்சனைக்காகக் காத்து நின்ற பக்தர்கள் தேர் அர்ச்சனை செய்தனர். பின்னர் குருக்களிடம் விபூதிப் பிரசாதம் பெற்றுக் கொண்டு நண்பகல் பன்னிரண்டு மணியளவில் வீடு நோக்கிப் புறப்பட்டோம்.

அலைகடல் நடுவில் அருள் ஒளி பரப்பும் அம்பிகையின் திருக்காட்சியினை என்னால் என்றுமே மறக்க முடியாதுள்ளது.

"நம்பினோர் கெடுவதில்லை
நான்கு மறைத் தீர்ப்பு
அம்பிகையைச் சரண் அடைந்தால்
அதிக வரம் பெறலாம்."

- பாரதியார்





## தைப்பொங்கல்

ஆண்டுதோறும் நாம் பல்வேறு பண்டிகைகளைக் கொண்டாடுகிறோம். அவற்றுள் தைப்பொங்கல் தனிச்சிறப்பு வாய்ந்தது. உழவர் திருநாளாம் தைப்பொங்கல் தமிழர்தம் பெருநாளாகவும் விளங்குகிறது. சாதி, மத பேதம் எதுவுமின்றித் தமிழர்கள் அனைவரும் இத் திருநாளைக் கொண்டாடுகிறார்கள். உழவர்தம் உழைப்புக்கு மதிப்பளித்துப் போற்றுகின்றார்கள்.

தைப்பொங்கல் திருநாள் தைமாதம் முதல் நாளில் கொண்டாடப்படுகிறது. தைமாதம், மாதங்களில் சிறப்பான

மாதமாகக் கணிக்கப்படுகிறது. இத் தைமாதத்திற்றான் சூரியன் உத்தராயணத்திற் பிரவேசிக்கின்றான் என்றும் இது புண்ணிய காலமென்றும் புரோகிதர்கள் கூறுவர்.

உழவன் உலகுக்கு உணவளிப்பவன். ஆண்டு முழுவதும் அயராது உழைத்து உணவுப் பொருட்களை உண்டு பண்ணுபவன் உழவனே. அவனது முயற்சிக்கு (தொழிலுக்கு) மழையும் வெயிலும் இன்றியமையாததாகின்றன. இவற்றைத் தருபவன் சூரியனே. ஆகவே அவனுக்கு உழவன் என்றும் நன்றி செலுத்தக் கடமைபட்டவனாகின்றான். எனவேதான் உழவன் சூரியனைத் தெய்வமாக மதித்துப் போற்றுகிறான். சூரிய பகவானுக்குத் தை முதல் நாளில் பொங்கலிட்டுத் தன் நன்றியைத் தெரிவிக்கின்றான்.

மக்கள் தமது இல்லங்களை முதல் நாளே சுத்தம் செய்வார்கள். தைப்பொங்கல் அன்று அதிகாலை நித்திரை விட்டெழுந்ததும், நீராடி, புத்தாடை அணிந்து கொள்வர். பின் இறைவனை வழிபடுவர். பின்னர் வீட்டு முற்றத்தில் மெழுக்கிட்டுக் கோலம் போடுவர். அவ்விடத்தில் புதிதாகச் செய்யப்பட்ட அடுப்புக்களை வைப்பர். நிறைகுடம் வைத்து, குத்து விளக்கில் தீபமேற்றுவர், சாணத்தில் அல்லது மஞ்சள் மாவில் பிடித்த பிள்ளையாரையும் வெற்றிலை, பாகுக்கு, வாழைப்பழம் ஆகியவற்றையும் அங்கு வைப்பர். பானையின் கழுத்தில் மஞ்சள் இலை, இஞ்சியிலை, மாவிலை என்பவற்றைக் கட்டுவர். பின்னர் அதனை அடுப்பில் வைப்பர். பால் பொங்கி வரும்போது தேங்காய் உடைப்பர். சிறுவர்கள் பட்டாசுகளைக் கொழுத்திப் "பொங்கலோ பொங்கல்" என்று குதூகலிப்பர்.

பொங்கும் பாலில் அரிசியையும் தேவையான பொருட்களையும் இடுவர். பொங்கல் சாதம் பதமாக வந்ததும் அடுப்பினின்றும் இறக்கி தலைவாழையிலையில் பொங்கல் சாதத்தையும் பழவகைகளையும் வைத்துச் சூரிய பகவானுக்குப் படைப்பர். தோத்திரங்கள் பாடுவர். சூரியனை நோக்கி வீழ்ந்து வணங்குவர். பின்னர் வீட்டில் உள்ளவர்களுக்கும் அயலவர்கட்கும் பகிர்ந்தளித்து உண்டு மகிழ்வர். உறவினர் இல்லங்கட்குச் சென்று பொங்கல் வாழ்த்துக்கூறி, குதூகலமாக அனைவரும் பொங்கல் திருநாளைக் கொண்டாடி மகிழ்வர்.







# எனது பிறந்த நாள்

1989 ஆம் ஆண்டு தைமாதம் பத்தாம் திகதி நான் பிறந்தேன். ஒவ்வோராண்டும் இத்திகதியன்று எனது பிறந்த நாளை எனது பெற்றோர் குதூகலமாகக் கொண்டாடி வருகின்றனர். இதனைக் கொண்டாடுவது குறித்து எனக்கு ஒரே மகிழ்ச்சி.

இவ்வாண்டு தைமாதம் பத்தாம் நாளன்று எனது பிறந்த நாள் வெகுசிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பெற்றார், உற்றார், உறவினர்கள் அனைவரும் இதிற் கலந்து கொண்டனர். அன்றைய தினம் அதிகாலையே நான் நித்திரை விட்டெழுந்து விட்டேன். என் அப்பாவும் அம்மாவும் பிறந்த நாள் வாழ்த்துக் கூறினார்கள். பின்னர் எனது காலைக்கடன்களை முடித்தேன். நீராடினேன். புத்தாடை அணிந்தேன். அம்மா என்னை எங்கள் ஊரில் உள்ள முருகன் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். அங்கு எனது பெயரையும், நட்சத்திரத்தையும் சொல்லி அர்ச்சனை செய்வித்தார். முருகனை முழுமனத்துடன் வணங்கி விட்டுப் பிரசாதம் பெற்றுக்கொண்டு வீடு திரும்பினோம்.

பிற்பகல் நான்கு மணியளவில் எங்கள் வீட்டில் திரண்டிருந்த உற்றார், உறவினர், நண்பர்கள் அனைவரும் வாழ்த்துக் கூறப் பிறந்த நாள் "கேக்கை" வெட்டினேன். அங்கு கூடியிருந்தோரனைவருக்கும் கேக் வழங்கப்பட்டது. பல்வேறு வகையான பலகாரங்களும் குளிர்பானமும் வழங்கினோம். இப் பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்டவர்கள் எனக்குப் பல வகையான பொருட்களை அன்பளிப்பாக வழங்கினர். அவர்களுக்கு நானும் பெற்றோரும் நன்றி கூறினோம். பின்னர் எங்கள் வீட்டில் உள்ள தொலைக்காட்சியில் திரைப்பட மொன்றைக் கண்டுகளித்தோம்.



7

## பயன் தரும் பனை

பனை வரண்ட பிரதேசங்களிலே வளரும். இலங்கையில் வடக்கு, கிழக்கு மாகாணங்களில் அதிகமாக இதனைக் காணலாம். எவ்வித வரட்சியையும் தாங்கும் சக்தி இதற்கு உண்டு.

பனை நீண்டு உயர்ந்து வளரும். அறுபது முதல் எண்பது அடிவரை இது வளரும். இதற்குக் கிளைகள் இல்லை. இதன் வட்டிலே ஓலைகள் உண்டு. வளர்ந்த பனையின் ஓலைகளுக்கு இடையில் பாளைகள் தோன்றும். இந்தப் பாளைகளைக் கொண்டே ஆண்பனை, பெண்பனை என்பதை நாம் அறிந்து கொள்ளலாம்.

பெண் பனையின் பாளைகளில் சிறுசிறு குரும்பைகள் தோன்றும். குரும்பை முற்றிப் பின் நுங்காகும். நுங்கு மிகவும் இனிமையானது. நுங்கு முற்றியதும் பழமாகும். பனம் பழத்தில் இருந்து பனாட்டுச் செய்கிறார்கள். பனங்கழியிலிருந்து ஜாம் செய்கிறார்கள். பனம் விதையிலிருந்து கிழங்கு உண்டாகும் பனங்கிழங்கும் பனாட்டும் மனிதர்களுக்கு உணவாகிறது.

பனையிலிருந்து பதநீரும், கள்ளும் சேர்ப்பார்கள், பதநீரைக் காய்ச்சிப் பனங்கட்டி செய்வார்கள். பனங்கட்டி மிகவும் இனிமையானது.

பனைமரம் வீடு கட்ட உதவும். பனை ஓலை வீடு வேயவும், வேலி அடைக்கவும், பாய், கூடை முதலிய பலவகையான பொருட்கள் இழைக்கவும் உதவும்.

பனையின் எல்லாப் பாகங்களும் மனிதருக்கு உபயோகம் உள்ளவை. இதனாற்றான் பனையைப் பூலோக கற்பகதரு என்று அழைக்கிறார்கள்.

"பனை வளர்ப்போம், பயன் பெறுவோம்"





8

## சுத்தம் சுகம் தரும்

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது முதுமொழி. நாம் நோயின்றி வாழச் சுத்தம் பேணுதல் மிக மிக அவசியமாகும். சுத்தமான காற்று, சுத்தமான உணவு, சுத்தமான உடை, சுத்தமான வசிப்பிடம் ஆகியன சுகவாழ்வுக்கு இன்றியமையாதன. "சுத்தம் சுகம் தரும்" என்னும் கூற்று இந்த உண்மையை நன்கு புலப்படுத்துகிறது.

சுத்தம் என்று கூறும்போது முதலில் நமது உடற்சுத்தம் பேணப்படவேண்டும். உடலில் அழுக்குப் படியாதபடி நாம் உடலை நன்கு தேய்த்துக் குளிக்க வேண்டும். பற்களை நன்கு துலக்குதல் வேண்டும். நகங்களில் அழுக்குச் சேராதபடி அவற்றின் நுனியைக் காலத்திற்குக் காலம் வெட்டிவிட வேண்டும். நமது உடைகளை நன்கு தோய்த்து, உலரவிட்டு அணிதல் வேண்டும்.

அழுக்கு நிறைந்த இடங்களில் நாம் வாழக் கூடாது. அழுக்குப் பொருட்களை வீட்டில் சேரவிடக் கூடாது. உடனுக்குடன் அவற்றை அகற்றிவிட வேண்டும். இவற்றைத் தேங்கவிட்டால் தொற்றுநோய்க் கிருமிகள் இவற்றிலிருந்து பெருகி நோய்களைத் தோற்றுவிக்கும். இதனால் மக்கள் வாழ்வில் சுகம் கெடும்.

நமது உணவுப் பண்டங்களை மூடி வைத்திருத்தல் வேண்டும். ஈ, எறும்பு போன்றவை மொய்க்காமல் உணவுப் பண்டங்களைப் பேண வேண்டும். கொதித்து ஆறிய நீரையே நாம் எந்நாளும் பருகுதல் வேண்டும்.

வீடு, சுற்றாடல் ஆகியவற்றைத் துப்புரவு செய்து சுத்தமாக வைத்திருத்தல் அவசியமாகும். சூழலில் நுளம்பு, ஈ போன்றவை பெருகுவதற்கு இடமளிக்கக் கூடாது. நோய் வந்தபின் வைத்தியம் செய்வதிலும் பார்க்க நோய் வராது பார்த்துக் கொள்வதே சிறந்தது.

எனவே நோய் வருமுன் காக்கும் நடவடிக்கையில் நாம் ஈடுபடவேண்டும். நாம் சுத்தமாக இருப்பதுடன் நமது சூழலையும் சுத்தமாக வைத்திருக்க முயற்சிக்க வேண்டும்.



# 9

# மழை நாள்

அன்று புதன்கிழமை. காலை ஏழுமணியிருக்கும். வானம் இருண்டு காணப்பட்டது. குளிர்காற்று வீசியது. திடீரென மின்னல் மின்னியது. தொடர்ந்து இடிமுழக்கம். அரைமணி நேரம் வரை ஒரே இடிமுழக்கமும் மின்னல்களும் எங்களைத் திணறடித்தன. பாடசாலைக்கு எனது தம்பியுடன் புறப்பட்டேன். புறப்படும்போது சிறுசிறு மழைத்துளிகள் விழுந்தன. குடையை விரித்துப் பிடித்தபடி நாங்கள் மெல்ல மெல்லப் பாடசாலையை நோக்கி நடந்து கொண்டிருந்தோம். சிறுசிறு தூறல் மழை பெரும் மழையாக மாறியது. "சோ" என்ற இரைச்சலுடன் மழை பொழிந்து தள்ளியது. குடையைப் பிடித்துக் கொண்டு நடக்க முடியாது போய்விட்டது.

வீதியின் பக்கத்தில் உள்ள கடையொன்றில் புகுந்து நின்றோம். தொடர்ந்து மழை பொழிந்துகொண்டே இருந்தது. எங்கள் உடைகளும் நனைந்து விட்டன. வீதியில் பெரு வெள்ளம் ஓடிக்கொண்டிருந்தது. சந்தைக்குப் பொருட்களுடன் சென்றவர்கள் பெருமழையில் நனைந்தபடி அயலில் உள்ள கட்டடங்களுக்குள் அடைக்கலம் புகுந்தனர். எங்கும் பெரு வெள்ளம். போக்குவரத்துக்கள் தடைப்பட்டன. சுமார் ஒரு மணி நேரம் மழை கொட்டு கொட்டென்று கொட்டியது. பாடசாலைக்குச் செல்ல முடியவில்லை. மழை விடும் வரை கடைக்கட்டடத்தில் நின்றோம். காலை ஒன்பது மணியாகி விட்டது. மழை சிறிது ஓய்ந்தது. வீடு நோக்கித் திரும்பினோம். வழியில் எங்களைப் போன்ற மாணவர்கள் சிலர் மழையில் நனைந்ததால் தத்தம் வீடுகளுக்குத் திரும்பிக் கொண்டிருந்தனர்.

வயல்நிலங்களில் பெருவெள்ளம் நிறைந்து நிற்பதைக் கண்டோம். வீதியில் வாகனங்கள் மழை நீரை வாரியிறைத்தபடி சென்று கொண்டிருந்தன. இதனால் வீதியிற் சென்ற சிலரது உடைகளில் அழுக்கு நீர் பட்டது. நாங்கள் வீதியோரமாக, நடந்து கொண்டிருந்தோம். இடைவழியில் எங்கள் அம்மா வந்துகொண்டிருந்தார். எங்களைக் கூட்டிச் செல்வதற்காகவே அவர் வந்ததாகக் கூறினார். அம்மாவுடன் நாங்கள் வீடு வந்து சேர்ந்தோம். மழைநாள் மகிழ்ச்சிகரமானதுதான். ஆனால் அது சிலவேளைகளில் எங்களுக்குப் பெரும் துன்பத்தையும் அளித்துவிடுகிறது.



# 10

# நான் ஒரு பறவையானால்

நேற்று மாலை பூந்தோட்டத்தில் நீர் ஊற்றிக் கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு அழகிய கிளி எங்கள் முற்றத்து மாமரத்தில் வந்திருந்தது. அதன் அழகு என்னைப் பெரிதும் கவர்ந்தது. அது கீ..கீ என்று கீச்சிடுவதே தனி ஆனந்தம். இதைப்போன்று யானும் ஒரு பறவையானால், எவ்வளவு ஆனந்தமாயிருக்கும் என்று எண்ணினேன். என் கற்பனை விரிந்தது.

நான் ஒரு பறவையானால் வானவெளியில் சிறகுகளை அகல விரித்து ஆனந்தமாகப் பறந்து செல்வேன். விரும்பிய வேளைகளில் விரும்பிய இடங்களில் அமர்வேன். எவ்வித் கட்டுப்பாடும் எனக்கிருக்காது. இந்த உலகில் மனிதர்கள் படும் துன்பங்கள் எதுவும் என்னைத் தொடரமாட்டா. சுதந்திரமாக எங்கும் பறந்து செல்வேன்.

உயர்ந்த மலைகள், பச்சைப் பசேலெனக் காட்சி தரும் வயல் வெளிகள், பழத் தோட்டங்கள், வானளாவிய மரங்கள் அனைத்திலும் நான் சென்று அமர்ந்து ஆனந்தமடைவேன். உணவைப் பற்றிய கவலையே எனக்கில்லை. நாளைக்கு என்னத்தை உண்போம். என்னத்தை உடுப்போம் என்று மனிதர்கள் சதா சஞ்சலப்படுகிறார்கள். பொருட்களைத் தேடிச் சேர்த்து வைக்க முற்படுகிறார்கள். பறவையாகிய எனக்கு இத்தகைய சஞ்சலம் எதுவுமேயில்லை. நாளைய உணவைப் பற்றி நான் சிந்திப்பதேயில்லை. காய்கறித் தோட்டங்கள், நெல்வயல்கள், பழத்தோட்டங்கள் ஆகியனதான் எங்கும் காணப்படுகின்றன. ஏன் நான் கவலைப்படவேண்டும். அவற்றில் விரும்பியபோது என் உணவைத் தேடிக்கொள்வேன். இயற்கைக் காட்சிகளைக் கண்டு இன்புறுவேன். உறங்குவதற்கு மாடி வீடுகளோ, குடிசைகளோ எனக்குத் தேவையில்லை. என் சகோதரர்களுடன் உல்லாசமாக மரஉச்சிகளில், கூடுகளில் படுத்துறங்குவேன். அதிகாலை வேளைகளில் எழும்புவேன், இதோ! மாலைவேளையாகிறது. நான் என் கூட்டுக்குச் செல்ல வேண்டும். என் சகோதரர்கள் அதோ பறந்து வருகிறார்கள் அவர்களுடன் நானும் செல்கிறேன்.

இப்படி எண்ணியவண்ணமிருந்த என் கற்பனையை அம்மாவின் அழைப்பு இடையிற் கலைத்துவிட்டது. "இதோ வருகிறேன்" என்று கூறியபடி அம்மாவிடம் ஓடினேன். நான் ஒரு பறவையாகும் ஆசைதான் நிறைவேறவில்லையே?



11

## எனது செல்லப்பிராணி

நான் அன்போடு வளர்க்கும் பிராணி "இராணி". அதுவே என் செல்லப் பிராணி. பால் போன்ற வெள்ளை நிறம், பஞ்சு போன்ற மெல்லிய உடல். பார்க்க ஆனந்தம் அளிக்கும் வண்ணத் தோற்றம், என்னைக் கண்டதும் சுற்றிச்சுற்றி ஓடிவரும் என் அன்புப் பூனைக்குட்டி இது.

எனக்கு இதன்மேல் கொள்ளை ஆசை. பெரிய கண்களை உருட்டி உருட்டி அது என்னைப் பார்க்கும். நான் அதற்குப் பாலும் சோறும் உண்ணக் கொடுப்பேன். நான் உணவு உண்ணும்போது என்னோடு அதுவும் அருகில் இருந்து சாப்பிடும். சாப்பிட்டு முடிந்ததும் என் மடியில் பச்சிளங் குழந்தை போல் அது படுத்து உறங்கும்.

நான் பாடசாலை சென்றுவிட்டு வீடுவந்து வாசற்படியில் ஏறும்போது என்னை வரவேற்க அம்மாவுடன் என் இராணியும் வந்து நிற்கும். மாலை வேளைகளில் நானும் இராணியும் தோட்டத்திற்குச் செல்வோம். பந்தை உருட்டி விளையாடுவோம். இராணி கட்டையான தனது கால்களினால் பந்தை உருட்டி விளையாடுவது பார்க்க ஆனந்தமாயிருக்கும்.

இராணி தன் கால் நகங்களை மரத்திலே தேய்த்துக் கூராக்கும். மரத்திலே பாய்ந்து ஏறும். பின் துள்ளித்துள்ளி என்னிடம் ஓடி வரும். அதன் செய்கைகளைப் பார்ப்பதில் எனக்கு நல்ல விருப்பம். எனது செல்லப்பிராணியான இராணியை என்னால் என்றுமே மறக்க முடியாது.





12

## எமது நாடு

எமது நாடு இலங்கை. இது இந்து சமுத்திரத்தின் முத்து என வர்ணிக்கப்படுகிறது. இது நீர்வளம், நிலவளம், மலைவளம், கடல்வளம், அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்ற எழில்மிகு நாடாகும். இதனால் இதன் புகழ் பாரெல்லாம் பரவிக் கிடக்கிறது. ஈழம், இரத்தினதுவீபம், தப்ரபேன், ஸ்ரீலங்கா எனப் பல பெயர் கொண்டு எமது நாட்டை அழைப்பர்.

இங்கு சிங்களவர், தமிழர், முஸ்லிம்கள், பறங்கியர் எனப் பல இனத்தினர் வாழ்கின்றனர். பௌத்தம், சைவம், இஸ்லாம், கிறிஸ்தவம் என்பன நமது நாட்டு மக்கள் பின்பற்றும் மதங்களாக உள்ளன. இலங்கை கடலாற் சூழப்பட்டுள்ள போதிலும் அதன் மத்தியில் உயர்ந்த மலைத் தொடர்கள் இருக்கின்றன. இங்குள்ள மலைத்தொடர்களில் பீதுறுதாலகால மலையே அதி உயர்ந்த மலையாகும். இம்மலைத் தொடர்களிலிருந்து பல ஆறுகள் உற்பத்தியாகி எமது நாட்டை வளமுறச் செய்கின்றன. எமது நாட்டில் பாய்ந்தோடும் நதிகளில் மகாவலிகங்கையே அதி நீளமானதாகும். எமது நாட்டில் பெறுமதிமிக்க கனிய வளங்கள் அகழ்ந்தெடுக்கப்படுகின்றன.

எமது நாடு ஒரு விவசாய நாடு ஆகும். தேயிலை, இறப்பர், தென்னை ஆகிய பொருட்களை ஏற்றுமதி செய்கின்றது. எமது நாட்டில் கைத்தொழில் வளர்ச்சியைப் பிரதிபலிக்கும் முகமாகச் சீனித்தொழிற்சாலை, சீமெந்துத்தொழிற்சாலை, புடைவை ஆலை, இரசாயனப்பொருள் தொழிற்சாலை, ஒட்டுப்பலகைத் தொழிற்சாலை ஆகிய தொழிற்சாலைகள் இருக்கின்றன. ஆடைத்தொழிற்சாலைகள் பல உள்ளன.

எமது நாட்டின் தலைநகராக ஸ்ரீ ஜெயவர்த்தனபுர விளங்குகின்றது. இயற்கைத் துறைமுகமாகத் திருகோணமலை விளங்குகின்றது. கொழும்பு, காலி, காங்கேசன்துறை என்பனவும் இங்கு உள்ள பெரிய துறைமுகங்களாகும். கட்டுநாயக்கா விமான நிலையம் எம் நாட்டின் பாரிய விமான நிலையம் ஆகும். எமது நாட்டின் இயற்கை அமைப்பு வெளிநாட்டவரைப் பெரிதும் கவருகின்றது. பல்லாயிரக்கணக்கான உல்லாசப் பிரயாணிகள் இங்கு வந்து செல்கின்றனர். எம் நாட்டின் இயற்கை எழிலே இதற்குக் காரணமாகும்.

13

# கல்வியின் சிறப்பு

உலகில் இருவகைச் செல்வங்கள் உள்ளன. ஒன்று கல்விச்செல்வம், மற்றையது பொருட்செல்வம், பொருட்செல்வம் பிறருக்குக் கொடுக்குந்தோறும் குறைவுபடும். நீராலும், நெருப்பாலும், அழியக்கூடியது. பிறரால் கவரக்கூடியது. ஆனால் கல்விச் செல்வமோ அழிவற்றது. நீராலோ, நெருப்பாலோ அழியாதது. கள்வரால் களவாட முடியாதது. பிறருக்குக் கொடுக்கும் தோறும் பெருகிக் கொண்டே செல்லும். இதனாற்றான் கல்விச் செல்வத்துக்கு நிகரான செல்வம் வேறில்லை என்று நம்முன்னோர் போற்றினர்.

மனிதரிடத்துள்ள அறியாமையைப் போக்கி அறிவு ஒளி ஊட்டுவது கல்வி. கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்புண்டு. கற்றறிந்தவனே கண்ணுடையவனெனக் கருதப்படுவான்.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்று நம்முன்னோர் கூறியுள்ளனர். மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் கற்க வேண்டியவற்றைக் கற்று, கற்றநெறிப்படி ஒழுக வேண்டும். இதனையே திருவள்ளுவரும்.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக" என்றார்

கற்கவேண்டியவற்றை நாம் கருத்தூன்றிக் கற்க வேண்டும். கற்க வேண்டிய பருவத்திற் கற்க வேண்டும். இளமையிற் கற்பதே சிறந்த செயலாகும். "இளமையிற் கல்வி சிலையில் எழுத்து" என்னும் முதுமொழியை நாம் மறக்கக் கூடாது. எல்லாவித அழகுகளிலும் ஒருவனுக்குக் கல்வி அழகே சிறந்த அழகாகும். இக்கல்வி அழகினைப் பெறுவதற்கு நாம் சலியாது முயற்சிக்க வேண்டும்.

கற்பதற்கு வயதுக்கட்டுப்பாடே இல்லை. வாழ்நாள் முழுவதுமே கற்கலாம். "பாடை ஏறினும் ஏடது கைவிடேல்" என்னும் கூற்றை நாம் மறக்கக் கூடாது.

அழியாத செல்வமான கல்விச் செல்வத்தைப் பெற்று இவ்வையத்து வாழ்வாங்கு வாழ நாம் முயற்சிப்போமாக!.



14

# எனது பாடசாலையில் நடைபெற்ற விளையாட்டுப் போட்டி பற்றிய கடிதம்.

வயலூர்,
28.09.2001

அன்பு நண்ப,

இவ்விடம் நான் நலமாயுள்ளேன். அவ்விடம் நீரும் நலமாயிருக்க இறைவனைப் பிரார்த்திக்கிறேன். உமது கடிதம் நேற்றுக் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி. எனது பாடசாலையில் நடைபெற்ற இல்ல விளையாட்டுப் போட்டி பற்றி எழுதுமாறு கேட்டிருந்தாய்; சுருக்கமாக எழுதுகிறேன்.

கடந்த புதன்கிழமை (19-09-2001) எனது பாடசாலை இல்ல விளையாட்டுப் போட்டி நடைபெற்றது. அன்று காலையே விளையாட்டு மைதானம் வெகு அழகாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. மைதானத்தின் மத்தியில் பச்சை, சிவப்பு, நீலம் என்னும் நிறங்கள் கொண்ட எங்கள் வித்தியாலயக் கொடி கம்பீரமாகப் பறந்துகொண்டிருந்தது. அதன் பக்கத்தில் பச்சை, சிவப்பு, நீல இல்லங்களுக்குரிய கொடிகள் தனித்தனியே காணப்பட்டன. மைதானத்தின் தெற்கு, கிழக்கு, மேற்குத் திசைகளில் இல்லங்களுக்குரிய பந்தல்கள் அழகாகக் காட்சியளித்தன. ஒவ்வோர் இல்லத்தினரும் தங்கள் இல்லத்தை அழகுற அலங்கரித்திருந்தனர். பார்வையாளர்களுக்கென வடக்குத் திசையில் பாரிய பந்தல் ஒன்றும் அமைக்கப் பட்டிருந்தது.

சரியாகப் பிற்பகல் இரண்டு மணிக்குப் பிரதம விருந்தினரும் அவரது பாரியாரும் வருகை தந்தனர். யாழ்ப்பாணப் பிரதேசக் கல்விப் பணிப்பாளரே பிரதம விருந்தினராக அழைக்கப்பட்டிருந்தார். அவரையும் பாரியாரையும் எங்கள் வித்தியாலய அதிபரும், ஆசிரியர்களும், விளையாட்டுத்துறைத் தலைவரும் வரவேற்று மைதான மத்திக்கு அழைத்துச் சென்றனர்.

முதலில் ஒலிம்பிக் தீபம் ஏற்றும் நிகழ்ச்சி இடம் பெற்றது. பிரதம விருந்தினர் ஒலிம்பிக் தீபத்தை ஏற்றிப் போட்டிகளை

ஆரம்பித்து வைத்தார்.

நீளம் பாய்தல், உயரம் பாய்தல், பரிதி வட்டம் வீசுதல், குண்டெறிதல் போன்ற நிகழ்ச்சிகள் ஒரு புறம் நிகழ்ந்தன. அதே வேளையில் மறுபுறத்தில் சிறுவர்களுக்கான பல்வேறு போட்டிகள் நடைபெற்றன. மாலை 3.30 மணியளவில் ஓட்டப்பந்தயங்கள் ஆரம்பமாயின. அடுத்தடுத்து நிகழ்ந்த இந்த ஓட்டப்பந்தயங்களில் மூன்று இல்லங்களையும் சேர்ந்த வீரர்களும் வீராங்கனைகளும் மிகுந்த உற்சாகத்துடன் கலந்து கொண்டனர். இந்நிகழ்ச்சிகள் பார்வையாளர்களைப் பெரிதும் கவர்ந்தன.

மாலை நான்கு மணியளவில் இடைவேளை விடப்பட்டது. அப்பொழுது பிரதம விருந்தினரும், பாரியாரும், அதிபரும் மூன்று இல்லங்களுக்கும் சென்று பார்வையிட்டனர். மூன்று இல்லத் தலைவர்களும், இல்ல ஆசிரியர்களும் அவர்களுக்குச் சிறப்பான வரவேற்பளித்தனர்.

நான் பச்சை இல்லத்தை சேர்ந்தவன். எங்கள் இல்லத்திற்கு பிரதம விருந்தினர் வருகை தந்த போது யான் மலர்மாலை சூட்டி அவரை வரவேற்றேன். இந்நிகழ்ச்சி என்னால் என்றும் மறக்க முடியாதது. இடைவேளையின் போது விநோத உடைப்போட்டி நடைபெற்றது. இதில் எங்கள் பச்சை இல்லத்திற்கு முதலிடம் கிடைத்தது.

மாலை ஐந்து மணியளவில் அஞ்சலோட்டங்கள் நடைபெற்றன. இங்கு நடைபெற்ற போட்டிகள் அனைத்திலும் அஞ்சலோட்ட நிகழ்ச்சிகளே பார்வையாளர்கள் மத்தியில் பெரும் ஆர்வத்தை ஏற்படுத்தின. அவர்கள் அனைவரும் கரவொலி எழுப்பி வீரர்களை உற்சாகப் படுத்தியதைக் காணமுடிந்தது.

மாலை ஆறு மணியளவில் போட்டிகள் யாவும் முடிவடைந்தன. அதன் பின்னர் பரிசளிப்பு ஆரம்பமாயிற்று. பிரதம விருந்தினரின் பாரியார் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கான பரிசில்களை வழங்கினார்.

போட்டிகளின் இறுதியில் நீல இல்லம் முதலிடத்தைப் பெற்றது. அதற்குப் பெரியதோர் வெற்றிக் கேடயம் பரிசளிக்கப்பட்டது. பச்சை, சிவப்பு இல்லங்கள் முறையே இரண்டாம், மூன்றாம் இடங்களைப் பெற்றன. அவற்றிற்கு வெற்றிக் கிண்ணங்கள் பரிசளிக்கப்பட்டன ஈற்றில் பாடசாலைக் கீதத்துடன் விளையாட்டுப் போட்டி நிறைவெய்தியது. கடந்த



ஆண்டைவிட இம்முறை எனது பாடசாலை விளையாட்டுப் போட்டி சிறப்பாயிருந்தது.

உமது பாடசாலை விளையாட்டுப் போட்டி அடுத்த மாத முற்பகுதியில் நடைபெறும் என்று எழுதியிருந்தீர். அதைப்பற்றி அறிய ஆவலுடையேன். எழுதுவீரென எதிர்பார்க்கிறேன்.

இங்ஙனம்,
உனது அன்பு நண்பன்,
சி. உதயன்.





## நான் கண்ட வீதி விபத்து

பாடசாலையிலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தேன். தெருவோரமாக வந்து கொண்டிருந்த வயோதிபர் ஒருவரை எதிரே வந்துகொண்டிருந்த மோட்டார்க் காரொன்று திடீரென மோதியது. பாவம்! வயோதிபர் தெருவில் தூக்கி வீசப்பட்டார். அவரது மண்டையிற் பலத்த அடிபட்டிருந்தது. அவரது கால்களிலிருந்து இரத்தம் கசிந்து கொண்டிருந்தது. பலத்த காயங்கள் காணப்பட்டன. வயோதிபர் சுயநினைவை இழந்துவிட்டார். பிணம்போல வீதியிற் கிடந்தார். அவரை மோதிய மோட்டார்க்கார் நிற்காது ஓடி மறைந்துவிட்டது.

நான் அதன் இலக்கங்களைக் கவனித்தமையால் அதனை எனது கொப்பியிற் குறித்துக்கொண்டேன். வீதியில் வந்த மக்களது உதவியுடன் வயோதிபரைத் தூக்கிச் சென்று ஒரு கடைக்கட்டிடத்தில் கிடத்தினோம். அயலில் உள்ள மோட்டார்க்கார்ச் சாரதிக்கு இது பற்றித் தகவல் கொடுத்தேன். உடனடியாக அவரது மோட்டார் வண்டியைக் கொணர்ந்து காயப்பட்ட வயோதிபரை வைத்திய சாலைக்கு எடுத்துச் சென்றோம். என்னுடன் எனது பாடசாலை மாணவர்கள் இருவரும் மற்றும் பொதுமக்கள் மூவரும் வைத்தியசாலைக்கு வந்திருந்தனர்.

வயோதிபருக்கு அங்கு அவசர சிகிச்சை அளிக்கப்பட்டது. இரண்டு மணி நேரமாக அவருக்கு அறிவு திரும்பவில்லை. அவரது தலையிலும் காலிலும் அடிபட்ட இடங்களில் எல்லாம் மருந்து வைத்துக் கட்டினார்கள். மயக்க நிலையிலேயே அவர் கிடந்தார். அவரைப் பரிசோதித்த வைத்தியர் பயப்படவேண்டிய தில்லை, அவரது உயிருக்கு ஆபத்து இல்லை என்றார். இதன்பின் எங்கள் மனம் நிம்மதியடைந்தது. வைத்தியசாலையி லிருந்து புறப்பட்டு நேரே நகர் காவலர் நிலையத்துக்குச் சென்றோம். அங்கு நடந்த விடயம் குறித்துக் தெரிவித்தோம். வயோதிபரை மோதிவிட்டு ஓடி மறைந்த மோட்டார்க்காரின் இலக்கங்களைக் கூறினோம். நகர் காவல் நிலைய அதிகாரி உடனடியாக நடவடிக்கை எடுப்பதாகக் கூறினார்.

பின்னர் மாலை ஐந்து மணியளவில் எனது வீடு வந்து சேர்ந்தேன். நடந்த விடயம் பற்றி என் அப்பாவிடம் கூறினேன். எனது செயலை அவர் பெரிதும் பாராட்டினார். ஆபத்து வேளையில் பிறருக்கு உதவுதல் மிக உயர்ந்த செயல் என்பதை யான் என்றும் மறக்கமாட்டேன்.



16

## தொலைக்காட்சியின் பயன்

விந்தை மிகு விஞ்ஞானத்தின் வளர்ச்சியினால் நாளுக்கு நாள் புதிய பல கருவிகள் கண்டுபிடிக்கப்படுகின்றன. மக்கள் வாழ்க்கையை இன்பமயமாக்குவதற்கு அவை பெரிதும் உதவுகின்றன. வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் ஆகியன விஞ்ஞானத்தின் விந்தைமிகு வெளிப்பாடுகளிற் சிலவாகும்.

உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் நடைபெறும் நிகழ்ச்சிகளை உடனுக்குடன் நாம் அறிவதற்கு வானொலி துணை செய்கிறது. வானொலியிற் செய்திகளை நாம் காதால் மட்டும் கேட்கமுடிகின்றது. ஆனால் தொலைக்காட்சி காதாற் கேட்டு கண்ணால் பார்த்து மகிழ்ந்திட உதவுகின்றது. நேருக்கு



நேராகத் தொலைக்காட்சியில் நிகழ்ச்சிகளைக் காண்கிறோம். இந்நிகழ்ச்சிகள் நம் மனதில் ஆழப் பதிந்து விடுகின்றன.

வீட்டில் இருந்தபடியே உலக அரங்கில் நடைபெறும் நிகழ்ச்சிகளை நேரிற் காண்பது போலக் கண்டு மகிழ்ந்திடத் தொலைக்காட்சி நமக்கு உதவுகிறது. தொலைக்காட்சியில் பலவிதமான நிகழ்ச்சிகளை நாம் காண்கிறோம். நாடகம், திரைப்படம் போன்றனவற்றையும் காண்கிறோம். வகுப்பறையில் பாடம் கற்பது போன்று கல்வி ஒளிபரப்பில் பல்வேறு பாடங்களைக் கற்றிட முடிகிறது. சிறந்த கல்விச் சாதனமாகவும் இது பயன்படுகிறது.

இலங்கையில் ரூபவாகினி, சுவர்ணவாகினி, எம்.ரி.வி, ரி.என்.எல், சுயாதீனத் தொலைக்காட்சி நிலையங்கள் உள்ளன. இவை பயன் தரும் பல்வேறு நிகழ்ச்சிகளைத் தினந்தோறும் ஒளிபரப்புகின்றன. இவற்றைப் பார்த்தும் கேட்டும் நாம் பயனடைகிறோம்.

இன்று மக்கள் தொலைக்காட்சியின் பயன்களை நன்குணர்ந்துள்ளனர். இதன் காரணமாகவே வீடு தோறும் தொலைக்காட்சிப் பெட்டிகளை வாங்கி வைத்திடமக்கள் விரும்புகிறார்கள். தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் நிகழ்ச்சிகளை நல்ல முறையில் பயன்படுத்தினால் நமது வாழ்வும் இன்பமயமாகும் என்பது திண்ணம்.



17

## நான் பங்கு கொண்ட சிரமதானம்

நான் தோப்பூர் கலைமகள் மகாவித்தியாலயத்தில் படிக்கின்றேன். எங்கள் பாடசாலையில் எழுநூறு மாணவர்கள் படிக்கின்றார்கள். இங்கு பெரியதொரு விளையாட்டு மைதானம் இருக்கிறது. இம் மைதானத்தில் நாங்கள் விளையாட்டுக்களில் ஈடுபடுவதற்கு ஏற்ற வசதிகள் இல்லாதிருந்தது. கல்லும் முள்ளும் நிறைந்ததாக இது காட்சியளித்தது. வருடத்தில்

ஒருமுறை நடைபெறும் இல்ல விளையாட்டுப் போட்டியின் போதுதான் இம்மைதானத்தைச் செப்பனிட்டுப் போட்டிகளிற் பங்குகொள்வோம். பின்னர் இம்மைதானத்தைக் கவனிப்பார் எவரும் இல்லை. இதனால் இம்மைதானம் பயன்படுத்தப்பட முடியாதிருந்தது.

எங்கள் பாடசாலையின் புதிய அதிபர் சிறந்த விளையாட்டு வீரர். அவர் இங்கு இடமாற்றம் பெற்று வந்ததும் இவ் விளையாட்டு மைதானத்தைச் சீரமைத்துத் தினந்தோறும் மாணவர்கள் அங்கு உடற்பயிற்சி, விளையாட்டு ஆதியாம் நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளவேண்டுமென வற்புறுத்தினார். ஆசிரியர்களிடமும் இது பற்றி எடுத்துக் கூறினார்.

மாணவர்களின் உடல், உள ஆத்மீக வளர்ச்சிக்கு விளையாட்டுக்கள் பெருந் துணைபுரிய வல்லன என்பதை பெற்றோர்கள், மாணவர்கள் மத்தியில் வலியுறுத்திக் கூறிவந்தார். இதன் பயனாகப் பாடசாலை அபிவிருத்திச்சங்கம், பழைய மாணவர் சங்கம் ஆகியவற்றின் ஒத்துழைப்புடன் இவ் விளையாட்டு மைதானத்தைச் சிரமதான முறையில் சீரமைப்பதென முடிவு செய்யப்பட்டது.

இதற்கமைய எங்கள் பாடசாலை மாணவர்கள், பழைய மாணவர்கள், பெற்றோர்கள் அனைவரும் அன்று காலை மைதானத்தில் ஒன்று கூடினோம். இச் சிரமதானத்தில் பங்கு கொள்வோரை நான்கு குழுக்களாகப் பின்னர் பிரித்தனர். இக்குழுக்கள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் பணி வழங்கப்பட்டது. ஒரு குழுவினர் மைதானத்திற் கிடந்த கற்களை அப்புறப் படுத்தினார். மற்றக் குழுவினர் புல், பூண்டுகளைப் பிடுங்கினர். மற்றக் குழுவினர் மைதானத்தின் மேடு, பள்ளங்களைச் சமப்படுத்தினர். நான்காவது குழுவினர் வெட்டிப் போடப்பட்ட புல், பூண்டுகளையும், குப்பைகளையும் கூட்டித் தள்ளினர்.

காலை ஏழு மணிக்கு ஆரம்பமான இச் சிரமதானப்பணி பகல் பன்னிரண்டு மணிவரை நடைபெற்றது. இச் சிரமதானப் பணியில் ஈடுபட்டவர்களுக்கு காலை ஒன்பது மணிக்கு ஆசிரியர்கள் காலை உணவு வழங்கினர். பின்னர் பதினொரு மணிக்கு அன்னவருக்கும் குளிர்பானம் வழங்கப்பட்டது. நண்பகல் பன்னிரண்டு மணிக்குச் சிரமதானப்பணி பூர்த்தி அடைந்தது. சுமார் பத்தாயிரம் ரூபா பெறுமதியான வேலை



இச் சிரமதானத்தின் மூலம் நிறைவெய்தியுள்ளதென்றும் இதில் பங்கு கொண்டோரனைவரும் பாராட்டுக்குரியவர்கள் என்றும் அதிபர் தமது நன்றியுரையில் குறிப்பிட்டார். பாடசால அபிவிருத்திச்சங்கச் செயலாளர் திரு. ச. கைலாசபிள்ளை, பழைய மாணவர் சங்கச் செயலாளர் திரு. க. சிற்றம்பலம் ஆகியோரும் சிரமதானப்பணியில் ஈடுபட்டோர்க்கு நன்றி தெரிவித்தனர்.

நீண்டகாலமாகச் செடி, கொடிகள் வளர்ந்து கவனிப்பாரற்ற நிலையிற் காட்சியளித்த எங்கள் பாடசாலை விளையாட்டு மைதானம் தற்போது புதுப்பொலிவுடன் காட்சி தருகின்றது.





## ஏழை கண்ட கனவு (கதை)

சோமன் ஒரு ஏழை. தினந்தோறும் நகரில் உள்ள கடைகளில் பிச்சை எடுத்துச் சீவித்து வந்தான். இரவில் நகரில் உள்ள சிவன் கோவிலின் முன்பாக உள்ள மடத்தில் படுத்து உறங்குவான்.

அன்று வெள்ளிக்கிழமை. கோயில் மடத்துக்குப் பக்கத்திலுள்ள சாப்பாட்டுக் கடைக்குச் சென்றான். கடை முதலாளி அவனுக்கு உணவு கொடுத்தார். நன்றாகச் சாப்பிட்டு விட்டு மடத்திற்கு வந்தான். நேற்றுக்காலை அவன் வாங்கி வைத்திருந்த லொத்தர்ச் சீட்டைப் பத்திரமாக மடித்து வேட்டித்தலைப்பில் முடிந்து கொண்டான். அதன் இலக்கங்களை பலமுறை மனப்பாடம் செய்து கொண்டான். சிறிது நேரம் படுத்து உறங்க எண்ணினான். மடத்தின் ஒரு மூலையில் படுத்துக் கொண்டான். சிறிது நேரத்தில் கண்ணயர்ந்தான்.

அவன் பக்கத்தில் ஒருவர் பத்திரிகையும் கையுமாக நிற்பது தெரிந்தது. அது அன்றைய "வீரகேசரி" பத்திரிகை. பத்திரிகையின் முதற் பக்கத்தில் லொத்தர்ச் சீட்டு முடிவுகள் பிரசுரமாகியிருந்தன. அதனையே அவரும் உன்னிப்பாகப் படிப்பதைச் சோமன் கண்டான். பக்கத்திற் சென்று பத்திரிகையை எட்டிப் பார்த்தபடி நின்றான். பத்திரிகையை வைத்திருந்தவர்

இதனைப் பார்த்தார். அவருக்கு அவன் மீது அனுதாபம் பிறந்தது. என்ன பார்க்கப் போகிறீர்? என்று கேட்டார். அவர் கேட்டது சோமனுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. "ஐயா! இந்தப் பத்திரிகையில் லொத்தர்ச் சீட்டு முடிவுகள் இருக்கின்றனவே அதைத் தான் பாாக்க ஆசைப்படுகிறேன்" என்றான் சோமன்.

அந்தப் பெரியவரும் அவன் மீது மனமிரங்கி "வீரகேசரி" யைக் கொடுத்தார். ஒவ்வொரு இலக்கத்தையும் சோமன் உன்னிப்பாகப் பார்த்தான். திரும்பத் திரும்பப் பார்த்தான். அவன் கண்களையே நம்ப முடியவில்லை. முதற் பரிசு பெற்ற இலக்கம் ஊ 1..2..0..7..0..6..5 என்று அதில் இருந்தது. திரும்பத் திரும்ப வாசித்தான். தன்னிடமுள்ள லொத்தர் சீட்டின் இலக்கமும் அவைதான் என்று உணர்ந்தான். உடனே அவனுக்கு ஆனந்தம் எல்லை மீறியது.

"இதோ! நான் பரிசு வாங்கப் போகிறேன். இன்றைக்கே கொழும்பு செல்ல வேண்டும்" என்று கூறியபடி துள்ளி எழும்பினான். எனக்குத்தான் முதற் பரிசு என்று அவன் வாய் முணுமுணுத்தது. சுற்றும் முற்றும் பார்த்தான். பாவம் பக்கத்தில் எவருமே இல்லை. வீதியில் வாகனங்கள் வேகமாகச் சென்று கொண்டிருந்தன. கோயிலில் மணி ஒலித்துக் கொண்டிருந்தது. அப்பொழுது தான் அவன் தன் நிலையினை உணர்ந்தான். இதுவரை நேரமும் தான் கண்டது கனவு என்பதையும் உணர்ந்து கொண்டான்.

"ஏழைக்கு ஏது இன்பம்" என்று அவன் வாய் மீண்டும் முணுமுணுத்தது.



19

## நண்பனின் பிறந்தநாள் விழாவுக்கு வாழ்த்துக் கடிதம்.

நல்லூர்
20-10-2001

என்னருமை நண்பன் மோகனுக்கு,

இவண் நலம். அவண் நாடுவதும் அஃதே. இன்று உமது கடிதம் கிடைத்தது. நன்றி. இம்மாதம் இருபத்தெட்டாம் திகதி



உமது பிறந்தநாள் விழாவைக் கொண்டாடவிருப்பதாகவும், அதில் தவறாது கலந்து கொள்ளுமாறும் என்னை அழைத்துள்ளீர்கள்.

அருமை நண்பா!

உமது அன்பின் அழைப்பை என்னாற் தட்ட முடியவில்லை. ஆனாலும் இங்குள்ள நிலைமை உமக்குத் தெரியும். இருநூற்று ஐம்பது மைல்களுக்கு அப்பால் உள்ள உமது வீட்டுக்கு யான் வருவது இன்றைய சூழ்நிலையில் இயலாதுள்ளது. பிறந்தநாள் விழாவைக் கொண்டாடும் உமக்கு எனது இதயபூர்வமான நல்வாழ்த்துக்களை இக் கடித மூலம் தெரிவிக்க விரும்புகிறேன். நீங்கள் பத்தாவது ஆண்டைக் கடந்து பதினோராம் ஆண்டில் அடியெடுத்து வைக்கும் வேளையில் அருமை நண்பன் பக்கத்தில் இல்லையே என்று கவலைப்படுவீர்கள். உண்மைதான், உங்கள் அப்பா கொழும்பில் நிரந்தரமாக வேலை செய்வதால் நீங்கள் அங்கு நிரந்தரமாகவே தங்கிவிட்டீர்கள். எங்கள் அப்பா இவ்வூருக்கு உத்தியோக இடமாற்றம் பெற்று வந்துவிட்டதால் யான் உங்களைப் பிரிய நேரிட்டது. என்றாலும் எந்நாளும் எனது உள்ளத்தில் உங்களைப்பற்றிய எண்ணம் நிறைந்துள்ளது. பாடசாலையில் நாங்கள் இருவரும் ஒரே வகுப்பில் ஒன்றாகக் கற்றதை மறக்கமுடியவில்லை. இன்றும் கூட அதனை நினைத்துப் பார்க்கிறேன்.

உமது பிறந்தநாள் விழாவில் நேரிற் கலந்து கொள்ள முடியாமை குறித்து வருந்துகிறேன். எனது அன்பின் அடையாளமாக இத்துடன் வரும் பரிசினை ஏற்றுக் கொள்ளவும்.

நீங்கள் சகல கலைகளிலும் வல்லவனாக, நல்லவனாக, பெற்றோரும், உற்றோரும், ஊரவர்களும் போற்றச் சீரும்சிறப்பும் பெற்று நீடுழி காலம் நிலைத்த புகழுடன் வாழ்க! வாழ்கவென வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்,
உனது அன்பு நண்பன்
க. சீலன்



20

## மாலைக்காட்சி

இயற்கைத் தாயானவள் எம் கண்களுக்கு விருந்தாக அர்ப்பணிக்கும் காட்சிகளில் மாலைக்காட்சியும் சிறந்ததொன்றாகும். பகல் முழுவதும் இயந்திரமாக ஓடியாடி உழைக்கும் மனிதர்கள் தொட்டுப் பாடிப் பறக்கும் புள்ளினங்கள் வரை அமைதியாகும் நேரமே மாலையாகும். ஆரவாரமான காலைப் பொழுதிற்கும் அமைதியான இனிய மாலைப்பொழுதிற்கும் இடையில் எத்துணை வேறுபாடுகள்.

சூரியன் அஸ்தமனமாகிறான். வானம் எங்கும் ஒரே சிவப்பு. பொன் மாலைப் பொழுதினிலே பறவையினங்கள் இசை எழுப்பிய வண்ணம் கூடு திரும்புகின்றன. விலங்குகள் இரை தேடிய பின்பு இருப்பிடம் நாடுகின்றன. வேலை முடிந்து வீடு திரும்பும் மக்கள் மனதில் மகிழ்ச்சி பொங்குகின்றது. பகல் முழுவதும் வயலிலே வேலை செய்த உழவன் ஆயாசத்துடன் வீடு திரும்புகிறான். இப்படி எத்தனையோ வகை மனிதர்கள்.

இவர்களையெல்லாம் ஒரு சிறிதேனும் பொருட்படுத்தாமல் இயற்கையானது தன் கடமையை ஒழுங்காகச் செயற்படுத்துகின்றது. மங்கிய மாலைப் பொழுதானது மகிழ்ச்சியையும், மனநிறைவையும் தருகின்றது. மாலைப் பொழுதின் இனிய சூழல் பல கவிஞர்களையும் உருவாக்கிக் கவிதை பாட வைக்கிறது. இவை யெல்லாவற்றையும்விட ஆலய மணியோசை இனிய தென்றலுடன் கலந்து வந்து செவிகளிலே ஒலிக்கின்றது. மக்கள் மனதிலே பத்திப் பரவசம் ஊற்றெடுக்கின்றது. வீட்டினில் மனையாள் சிறந்த வாழ்வு கருதி தீபமேற்றுகின்றாள். பிள்ளைகள் பாடம் படிப்பதற்குத் தயாராகின்றனர். பகல் முழுவதும் ஓடியாடியுழைத்த வீட்டுத் தலைவன் மனைவி மக்களுடன் சந்தோஷமாகப் பொழுதைக் கழிக்கின்றான். இவ்வகையில் சிறந்த பல செய்கைகளை உள்ளடக்கிய மாலைப்பொழுது மகத்தானதுதான்.





21

## நான் விரும்பும் தொழில்

உலகில் பல தொழில்கள் உள்ளன. அவற்றுள் மனிதனை அறிவுள்ளவனாக ஆக்கும் தொழில் ஆசிரியத் தொழிலாகும். அத்தொழிலே நான் விரும்பும் தொழில். ஒரு சிறந்த ஆசிரியன் தெய்வத்திற்குச் சமனாக மதிக்கப்படுகிறான். குருவைத் தெய்வமாக மதிக்கும் பண்பு நமது சமுதாயத்திற்கு உண்டு. "எழுத்து அறிவித்தவன் இறைவன் ஆவான்" என்ற கூற்றும் இதனையே உணர்த்துகிறது.

ஆசிரியத் தொழில் மன நிறைவைத்தரும் தொழிலாகும். கல்விச் செல்வத்தை மற்றவர்க்கு இல்லையென்னாது அள்ளிக் கொடுக்க இத்தொழில் நமக்குத் துணை செய்கிறது. ஏழை, பணக்காரன், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பேதம் ஏதுமின்றி அனைவருக்கும் உதவக் கூடிய தொழில் ஆசிரியத்தொழில். அதனாலேயே இத்தொழிலை நான் பெரிதும் விரும்புகிறேன்.

அன்னை தரும் அன்னம் உண்டபோதிலும் மீண்டும் பசி எடுக்கிறது. அப்பா தரும் பொருட்செல்வமும் நாளடைவில் அழிந்து போகிறது. ஆனால் ஆசிரியர் தரும் அறிவுச் செல்வம் என்றுமே அழியாது நம்மைத் தொடர்கிறது. இத்தகைய புனிதமான தொழிலுக்கு நிகரான தொழில் வேறெதுவுமே இல்லை எனலாம்.

ஆசிரியத் தொழிலின் மூலம் என் அறிவை மேன்மேலும் வளர்த்திட வாய்ப்புண்டு. சிறந்த பண்பையும் பழக்க வழக்கங்களையும் நான் கைக்கொள்ளமுடியும்.

இத் தொழிலில் ஈடுபட்டுள்ளோருக்கு அரசு தற்போது அதிக சம்பளம் வழங்குகிறது. விடுமுறை நாட்களும் அதிகம் கிடைக்கிறது. இவ்விடுமுறை நாட்களை நல்லமுறையில் பயன்படுத்திக் கல்வித்துறையில் நான் மேன் மேலும் முன்னேற முடியுமென நம்புகிறேன். அறிவுக்கு அளவில்லை. வயதுக் கட்டுப்பாடும் இல்லை. எனவே வாழ்நாள் முழுதும் அறிவைத் தேடிட நான் விரும்புகின்றேன். அதற்கு ஆசிரியத்தொழில் எனக்கு பெரிதும் உதவுமெனக் கருதுகின்றேன்.

நான் கற்றவற்றைப் பிறர்க்கு வழங்கிட ஆசிரியத் தொழில் பயன்படும். இதன் மூலம் சமுதாயத்திற்கு என்னாலான பணிகளைச் செய்திட முடியும்.

உலகிலேயே மிகச்சிறந்த தொழிலாகக் கருதப்படும் ஆசிரியத்தொழிலை மேற்கொண்டு என்னாலான பணிகளைச் செய்வதற்குப் பெரிதும் விரும்புகிறேன்.



22

## பாடசாலை விடுமுறையைக் கழித்த விதம் பற்றி நண்பனுக்குக் கடிதம்.

பருத்தித்துறை வீதி,
நல்லூர்,
யாழ்ப்பாணம்.
22-09-2001

அன்பு நண்பன் கண்ணனுக்கு,

இவண் நலம், உமது நலம் அறிய ஆவலுடையேன். நீங்கள் 15-9-2001 திகதி எழுதிய கடிதம் கிடைக்கப்பெற்று யாவும் அறிந்தேன். நன்றி.

நான் இத்தவணை விடுமுறையைக் கழிப்பதற்காகக் கண்டியில் உள்ள மாமா வீட்டிற்குச் சென்றிருந்தேன். கண்டி மாநகரைப்பற்றி நான் இவ்வளவு காலமும் கேட்டு அறிந்திருந்த பல உண்மைகளை நேரிற் கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தேன்.

கண்டியில் பல்வேறு இன மக்கள் வாழ்கிறார்கள். அவர்கள் பல்வேறு தொழில் புரிகிறார்கள். பல சமயங்களைச் சேர்ந்தவர்களாக அங்குள்ளார் விளங்குகின்றனர். மொழி, இன, மத பேதம் எதுவுமின்றி அங்குள்ள மக்கள் வாழ்கிறார்கள்.

கண்டி இயற்கை வளம் நிறைந்த பிரதேசம். வான் முட்டும் மலைகளும் வற்றாத நதிகளும் இங்குள்ளன. கண்டியில் உள்ள தேயிலைத்தோட்டங்கள் சிலவற்றை நான் நேரிற் பார்த்து மகிழ்ந்தேன். அங்கு தொழிலாளர்கள் தேயிலைக் கொழுந்து கிள்ளும் பணியில் ஈடுபட்டுள்ளதையும் பார்த்தேன். தேயிலைத் தோட்டங்கள் கண்ணைக் கவரும் வகையில் காட்சியளித்தன.



மலைநாட்டின் மத்தியில் உள்ள கண்டி நகரம் உண்மையிலேயே அழகு நகராகவே எனக்குத் தென்பட்டது. இரவு வேளைகளில் மின்னொளியில் இந் நகரைப் பார்ப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். இதனை நேரிற் பார்த்தாற்றான் உமக்கு இந்நகரின் சிறப்பு நன்கு விளங்கும். மலைகள் தான் எத்தனை அழகு! அவை கண்டியின் அழகுக்கு அரணாக விளங்குகின்றன. மாமா இவற்றையெல்லாம் எனக்குக் காண்பித்தார். பல இடங்களுக்கும் கூட்டிச்சென்று இயற்கை அழகைக் காண்பித்தார். இனிய உணவுப் பண்டங்களை வாங்கித் தந்தார். நான் அவற்றை மிக்க ஆசையுடன் சாப்பிட்டேன்.

இருவார காலம் கண்டியில் மாமா வீட்டில் தங்கியிருந்தேன். எந்நேரமும் அங்கு குளிர்தான். இரவில் கடும் குளிர் என்னை வாட்டியது. கம்பளிப் போர்வைக்குள் புகுந்து கொள்வேன். காலையில் சூரியன் உதித்தபின்தான் குளிர் சிறிது குறையும். அங்குள்ளாருக்கு இச் சுவாத்தியம் பழக்கப்பட்டு விட்டது. புதிதாகச் செல்பவர்களுக்குத்தான் சிரமம்.

கண்டியில் உள்ள தலதாமாளிகை மிகவும் புனிதமானது. அதனைத் தரிசிக்கத் தினந்தோறும் பெருந்தொகையானோர் வருகிறார்கள். நான் மாமாவுடன் தலதா மாளிகைக்குச் சென்று பார்த்ததுடன் அதன் வரலாற்றையும் கேட்டறிந்தேன். பேராதனையில் உள்ள பூந்தோட்டம், பல்கலைக்கழகம் ஆகியவற்றையும் பார்த்து மகிழ்ந்தேன். மகாவலிகங்கை பாய்ந்தோடும் வேகம், அப்பப்பா! நினைக்கவே பயமாக இருக்கிறது.

நான் பார்த்த காட்சிகளை இப்படியே எழுதிக் கொண்டு போகலாம். கடிதம் நீண்டுவிடும். விடுமுறையை நல்லமுறையில் பயன்படுத்திக்கொண்டேன். அடுத்த தவணை விடுமுறைக்கும் கண்டி செல்ல வேண்டுமென்றே ஆசைப்படுகிறேன். அவ்வளவுக்கு அந்த இடம் என்னைக் கவர்ந்து விட்டது. தங்கள் வீட்டார் அனைவரதும் சுகம் எப்படி? உமது பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

இங்ஙனம்,
உமது அன்பு நண்பன்,
இ. சுரேஸ்.



## 23

# விஞ்ஞானிகளைப் போற்றுவோம்

புத்தம் புதிய கலைகள் பலவற்றுள் விஞ்ஞானக்கலை இன்று மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. இக்கலையில் ஈடுபட்டுள்ளவர்களே விஞ்ஞானிகள். அவர்கள் மற்றவர்களுக்குச் சாதாரணமாகத் தோன்றும் பொருள்களில் புதுமை காண்பவர்கள். புதுமைகளுக்கு என்றும் பற்றாக்குறை கிடையாது. விஞ்ஞானிகள் தொடர்ந்து புதுமைகளைக் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைப் போற்றுவது நமது கடமையாகும்.

வெப்பத்தை அளவிடுவதற்கு வெப்பமானி, பாரத்தை எடை போடுதற்குப் பாரமானி, பக்றீரியா போன்ற நுண்கிருமிகளைக் கண்ணுக்குப் புலப்படச் செய்வதற்கு மைக்ரோஸ்கோப், தூரத்தில் உள்ள பொருள்களைப் பருமனாகவும் தெளிவாகவும் காட்டுவதற்குத் தொலைநோக்காடி ஆகிய கருவிகளையும் மற்றும் மனித சமுதாயத்துக்கு உதவக்கூடிய எத்தனையோ கருவிகளையும் விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கின்றனர். இன்னும் கண்டுபிடித்துக் கொண்டிருக்கின்றனர்.

இன்று விஞ்ஞானத்துறையில் முன்னேறியுள்ள நாடுகளே முற்போக்கான நாடுகளாகக் கருதப்படுகின்றன. புதியன எல்லாம் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டன. இனிக் கண்டுபிடிப்பதற்கு எதுவும் இல்லை என்று சிலர் கூறலாம். அது தவறு.

இயற்கை இன்னும் எண்ணிறந்த புதுமைகளை மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறது. மனிதனுக்கு இன்றியமையாது தேவைப்படும் பொருட்களுக்குப் பற்றாக்குறை உள்ளது. நோய்கள் பெருகியுள்ள இன்றைய உலகிற்கு இன்னும் புதுமையான மருந்து வகைகள் தேவைப்படுகின்றன.

எனவே விஞ்ஞானிகள் இன்னும் கண்டுபிடிக்க வேண்டிய புதுமைகளுக்கு நாம் வரையறை கூறமுடியாது. புதியன கண்டுபிடிப்பதற்கு அவர்களை நாம் ஊக்குவிக்க வேண்டும். அரசும் சமுதாயமும் அவர்களை நன்முறையில் பயன்படுத்த வேண்டும். அவர்களது பணி சிறக்க ஆதரவு நல்கவேண்டும்.





## 24

# பொழுது போக்கு

படிப்பு, விளையாட்டு, உணவு உண்ணல், நித்திரை அவை தவிர்ந்த நேரங்களில் பொழுதைப் போக்க நாம் பயனுள்ள வழிவகைகளைத் தெரிந்துகொள்ள வேண்டும். படிக்கும் போது படிப்பில் கவனம் முழுக்க முழுக்கத் தேவை. அதே போன்று விளையாட்டில் கவனம் தேவை. சிறுவர்களுக்கு விளையாட்டு தெம்பு தருகிறது. அன்பும் ஆரோக்கியமும் கொடுக்கிறது. பொறுமையும் பெருமையும் சேர்த்துத் தருகிறது.

வேலை செய்தாலும் பொழுது போகும் சும்மா இருந்தாலும் பொழுது போகும். ஆனால் போகும் பொழுதை நமக்குப் பயனள்ளதாக ஆக்கிக் கொள்ள வேண்டியது அவசியமாகும். கல்வி கற்றல், கல்வியோடு கலையின் மீது கவனம் செலுத்துதல், விளையாட்டுகளில் ஈடுபடல், வானொலி கேட்டல், நூலகங்களுக்குச் சென்று நூல்கள் வாசித்தல், முத்திரைகள் சேகரித்தல், வீட்டுத் தோட்டம் செய்தல் இத்தகைய பல்வேறு விடயங்களில் நாம் பொழுதைப் போக்கலாம்.

அவரவர் மனநிலை, சக்தி, சூழ்நிலைக்கு ஏற்றதாகப் பொழுது போக்குகள் பல இருக்கின்றன. நமது அறிவு, ஞானம், உள்ளம் யாவும் நாம் ஈடுபடுகின்ற பொழுது போக்குகளால் கூர்மை பெறுகின்றன. உழைப்பும் பொழுது போக்கும் வலக்கை இடக்கை போன்றவை. படிப்பும் பொழுது போக்கும் பறக்கும் பறவையின் இறக்கை போன்றவை. இவற்றை நன்குணர்ந்து நல்ல பொழுது போக்குகளை நாம் தெரிந்து கொள்வோமாக.



25

# மரம் நடுவோம்

மரங்கள் மக்களுக்குப் பெரும் பயன் நல்குகின்றன. மக்கள் அவற்றின் பெருமை உணர்ந்து செயற்பட வேண்டும். மரங்கள் மண்ணில் வேர் விடுகின்றன. முளை விடுகின்றன. பச்சைப் பசேலென்று இலைகள் வளருகின்றன. அவை பார்ப்பதற்கு அழகைக் கொடுக்கின்றன. நெடு நெடுவென்று உயரமாக வளர்ந்தாலும் தென்னை, பனை மரங்கள் கிளை விடுவதில்லை. உலகில் பலவகை மரங்களை நாம் காண்கின்றோம். அவை ஒவ்வொன்றும அளித்திடும் பயன்களோ பற்பல.

மரங்களின் காய் கனிகள் உணவாகப் பயன்படுகின்றன. மருந்தாகப் பயன்படுகின்றன. மரங்கள் மண்ணரிப்பைத் தடுக்கின்றன. மக்களுக்கு நிழலைத் தருகின்றன. மரங்கள் பூமிக்கு மழை கொண்டுவரத் துணை புரிகின்றன.

சிறிய வித்துக்களிலிருந்து தோன்றும் மரங்கள் பாரிய பயனை மக்களுக்கு அளிப்பதை நாம் கண்ணாரக் காண்கிறோம். பயன் கருதாது அவை தரும் பயன்களை அனுபவிக்கும் நாம் நமது சொந்தத் தேவைகளுக்காக அவற்றை வெட்டி அழித்தும் விடுகின்றோம். நம் முன்னோர் நாட்டிய மரங்களின் பயன்களைப் பெற்றுக்கொள்ளும் நாம் நமது வருங்காலச் சந்ததியினரின் நலன் கருதி மரம் நாட்டும் பணியில் ஈடுபடுவது அவசியமாகும். வீட்டுக்கு ஒரு மரம் நடுவோம். அதனால் நமக்கும் நன்மை, நாட்டுக்கும் நன்மை.

"மரம் நடுவோம் மரம் நடுவோம்
மகிழ் வுடனே வாருங்கள்
மரத்தின் அருமை தெரிந்து நாங்கள்
மரம் நடுவோம் வாருங்கள்"





26

# பெரியோரைக் கனம் பண்ணுவோம்

அறிவு, ஆற்றல், அனுபவம், வயது ஆகியவற்றால் முதிர்ந்தோரையே நாம் பெரியோர் என்கிறோம். அத்தகையோரை மதித்து நடப்பது நமது கடமையாகும் "பணியுமாம் என்றும் பெருமை" என்கிறார் திருவள்ளுவர். பணிவு என்றால் பெரியவர்களுக்கு அடங்கி மரியாதை காட்டுவது ஆகும். "அடக்கம் அமரருள் உய்க்கும்" என்பது குறள். பணிவு என்றும் உயர்வு தரும். தேவர்கள் மத்தியில் ஒருவனைக் கொண்டு சேர்க்கும் என்பதே அதன் பொருள்.

நாம் வயது முதிர்ந்தோரைப், பெரியோரைக் கனம் பண்ணுதல் வேண்டும். படித்தவர்களிடம், பண்புள்ளவர்களிடம் பணிவு காட்ட வேண்டும். அவர்களிடமிருந்து நல்ல அறிவுரைகளைப் பெற்றிட வேண்டும். நமது முன்னோர் பெரியோரைக் கனம் பண்ணினர். அவர்களது வழிகாட்டலின் மூலம் வளமான வாழ்வினைப் பெற்றனர். இன்று நம்மவர் பலர் பெரியோரைக் கனம் பண்ணப் பின்னிற்கின்றனர். இந்நிலை மாறவேண்டும். பெரியோர்களின் ஆசி மொழிகள் நமது வாழ்வை உயர்த்திட உதவும் என்பதை உணர்ந்து அவர்களை நாடி அவர்களது ஆசி மொழிகளைப் பெற வேண்டும். மாணவர்களாகிய நாம் "பெரியோரைக் கனம் பண்ணு" என்னும் பழமொழியை என்றும் கடைப்பிடித்து ஒழுகிட முன் வரவேண்டும்.

"பெற்றோர் தம்மைப் பேணிடுவோம்
பெரியார் தம்மை மதித்திடுவோம்
உற்றார் தமக்கும் உதவிடுவோம்
உழைப்பால் வாழ்வில் உயர்ந்திடுவோம்."



27

# அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பது ஔவைப்பிராட்டியின் மணிவாக்கு. மாதா, பிதா, குரு, தெய்வம் என்று வரிசைப்படுத்தி அன்னைக்கு முதலிடம் கொடுத்தார்கள் அறிவு மிக்க ஆன்றோர்கள்.

நம்மைப் பத்துமாதம் வயிற்றில் சுமந்து பெற்றவள் நம் அன்னை. நமக்காக மருந்துகள் பல உண்டு, பத்தியமிருந்து நம்மைக் காத்தவள் அவள். ஈ, எறும்பு நம்மைத் தீண்டாது பாதுகாத்து வளர்த்தவள் நம் அன்னை. தாலாட்டிச் சீராட்டிச் சோறூட்டி நம்மை வளர்த்த அன்னையை நாம் என்றுமே மறக்க முடியாது.

நம் சுக துக்கங்களில் பிறந்தநாள் முதல் இறக்கும்வரை பங்குகொள்பவள் தாய். பெற்றவள் அறிவாள் பிள்ளையின் அருமை என்பர். "பெற்ற மனம் பித்து" என்றும் கூறுவர். தாய் நமக்குச் செய்த உதவிக்கு நம்மால் எதையுமே ஈடு செய்ய முடியாது. ஆகவே தாயினிடம் நாம் அன்பும் பணிவும் உடையவர்களாக இருத்தல் வேண்டும்.

"தாய்சொல் துறந்தால் வாசகமில்லை" என்னும் கூற்று தாய் சொல்லைத் தட்டி நடக்கக்கூடாது என்பதையே சுட்டிக்காட்டுகிறது. மாதாவை ஒருநாளும் மறக்காது நாம் வாழ வேண்டும்.

தாயைப் போன்றே தந்தையும் நம்மை வளர்ப்பதில் பெரும் பங்கு கொள்கிறார். நமது சுகவாழ்வுக்கு, கல்விக்கு ஊன்று கோலாகத் திகழ்கிறார். பாடுபட்டு உழைத்து நமது வளமான வாழ்வுக்கு வழி செய்கிறார். இல்வாழ்க்கை சிறப்புடன் அமையத் துணை செய்கிறார்.

"தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்பர். எனவே தந்தை சொற்கேட்டு நாம் பணிந்து நடக்க வேண்டும். அன்னையும் பிதாவுமே நம் கண்கண்ட கடவுளர்கள். அவர்கள் சொற்படி நல்வழியில் நடப்பதே நாம் அவர்களுக்குச் செய்யும் பணியாகும்.





28

# பாவேந்தர் பாரதிதாசன்

உலகச் செம்மொழிகளில் உயர் தனிச் சிறப்புடையது நம் தமிழ்மொழி. அமிழ்தனைய தமிழ்மொழியில் காலத்தால் அழியாத கவிதை மழை பொழிந்த கவிஞர் பலர் உளர். அவர்களுள் புதுவை தந்த புரட்சிக்குயில் பாவேந்தர் பாரதிதாசனும் ஒருவர். "தமிழுக்கு அமுதென்று பேர். அந்தத் தமிழின்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்" என்று முழக்கமிட்ட புரட்சிக் கவிஞர் அவர்.

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ்நாட்டைப் பெருமைப்படுத்திய பாரதியின் எண்ணங்களை எம் இதயங்களில் ஏற்றியவர் பாவேந்தர் பாரதிதாசன். கனகசபை சுப்புரத்தினம் என்பதே அவர் இயற்பெயர். பாரதிமீது கொண்ட பாசத்தினால் தமது பெயரையே பாரதிதாசன் என்று மாற்றிக் கொண்டார். பாவேந்தரின் கவிதைப் பயணம் நெடியது, உயரியது, அவருடைய தமிழ்ப்பணிக்கு ஈடில்லை. பாவேந்தர் படைப்புக்களின் தொடர்கள், உவமைகள், சந்தப்பாங்கு, அவற்றின் வீறுநடை தமிழர்க்கும், தமிழறிந்தோர்க்கும நல்விருந்து.

தமிழை உயிராய், உணர்வாய், உழைப்பின் விளைவாய்க் கண்டுணர்ந்து கவிதை பாடியவர் பாவேந்தர் பாரதிதாசன். தமக்குப் பின் ஒரு பரம்பரையையே படைத்துச் சென்ற பெருமைக்குரியவர். பாவேந்தரின் சிந்தனைப் படைப்புக்கள் தமிழர்க்குக் கலங்கரை விளக்கு. அழகின் சிரிப்பு, குடும்பவிளக்கு, பாண்டியன் பரிசு, சேரதாண்டவம், இளைஞர் இலக்கியம், பிசிராந்தையார், தேனருவி, எதிர்பாராத முத்தம், குறிஞ்சித் திரட்டு, பாரதிதாசன் கவிதைகள் ஆதியாம் நூல்கள் அவர் தம் புகழ் பரப்பும் படைப்புக்கள். அவற்றைப் பயன்படுத்திப் புதியதோர் உலகம் படைக்க உழைப்பது நம் கடமை.

தமிழே நல்லுயிர், தமிழே நன்மொழி, தமிழே தமிழரின் சொத்தென முழங்கிய பாவேந்தரின் நாமம் நீடு வாழ்க! வாழ்கவென வாழ்த்துவோம்.



29

# நன்றி மறவேல்

ஒருவர் நமக்குச் செய்த உபகாரத்தை, உதவியை நாம் என்றென்றும் மறக்கக் கூடாது. எந்த அறத்தை மறந்தவர்களுக்கும் உய்ய வழி உண்டாகும். ஆனால் ஒருவர் செய்த உதவியை - நன்றியை மறந்தவருக்கு உய்வே இல்லை என்கிறார் வள்ளுவர். தக்க தருணத்தில் செய்த உதவி அளவில் சிறிதாயினும் அது உலகத்தை விடப் பெரியது. தினையளவு நன்றி செய்யினும் பனையளவாக அதனை நாம் கருத வேண்டும்.

ஒருவர் செய்த உதவியை மறப்பது தருமமாகாது. ஆனால் அவர் செய்த தீமையை உடனே மறந்துவிட வேண்டும். நாம் பிறருக்கு உதவி செய்தால் அதை அவர்கள் நமக்கு எப்பொழுது திருப்பிச் செய்வார்கள் என்று எதிர் பார்க்கக் கூடாது. பயன் கருதாது உதவிடல் வேண்டும்.

தென்னம் பிள்ளைக்குத் தண்ணீர் ஊற்றுகிறோம். அது நமக்கு அந்த உதவியைத் திருப்பித்தரும் என்று ஊற்றவில்லை. ஆயினும் அது தன் வேரின் மூலம் பெற்ற நீரைப் பின்னர் நமக்கு இளநீராகத் தருகிறது. இதனையே நன்னெறி ஆசிரியர்.

“நன்றி ஒருவருக்குச் செய்தற்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால்”

என்னும் பாட்டின் மூலம் அழகுற எடுத்துக் காட்டுகின்றார்.

பகுத்தறிவில்லா மரமே இப்படிச் செய்யும் போது பகுத்தறிவு படைத்த மனிதர்! ஒருவர் செய்த உதவியை மறந்துவிடலாமா? இல்லை. எந்நாளும் நன்றியுடன் நினைவு கூரவேண்டும். பஞ்சதந்திரக் கதைகள், ஈசாப் கதைகள் ஆகியனவும் நமது நீதிநூல்களும் இதனையே வலியுறுத்து கின்றன.





30

# ஓடி விளையாடு பாப்பா

“ஓடி விளையாடு பாப்பா - நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா”

என்று சின்னஞ் சிறுவர்களைப் பார்த்துக் கூறுகிறார் பாட்டுக்கொரு புலவரான பாரதியார். உடல் நலம் பெற வேண்டுமானால் நாம் ஓடி விளையாட வேண்டும். அப்பொழுதுதான் இரத்த ஓட்டம் சீராக அமையும். உடல் உரம் பெறும். ஆரோக்கிய வாழ்வுக்கு இது வகை செய்யும்.

“ஆரோக்கியம் உள்ள உடலிற்றான் ஆரோக்கியமான மனநலம் இருக்கும்” என்பர். பச்சிளம் குழந்தைப் பருவத்திலிருந்தே ஏதோ ஒரு வகையில் உடற்பயிற்சி நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது. ஆனால் இளஞ் சிறார்கள் தங்கள் வயதுக்கேற்ப பல விளையாட்டுக்களிலும் தேகப்பயிற்சிகளிலும் ஈடுபடுதல் அவர்களது உடல் வளர்ச்சிக்கு அவசியமாகும்.

விளையாட வேண்டிய நேரத்தில் விளையாட வேண்டும். வேலை செய்ய வேண்டிய நேரத்தில் வேலை செய்ய வேண்டும். படிக்கவேண்டிய நேரத்தில் படிக்க வேண்டும். இதனை நாம் கருத்திற் கொண்டு செயற்பட வேண்டும்.

கல்லூரிகளில் உள்ள விளையாட்டு மைதானங்களிலும், நமது கிராமங்களில் உள்ள திறந்த வெளிகளிலும் நாம் விளையாடலாம். தெருவீதிகளில் நின்று விளையாடுதல் ஆபத்தானது. விளையாட்டுக்களில் ஈடுபடும்போது கட்டுப்பாட்டுடனும் ஒழுங்குடனும் நாம் நடந்து கொள்ள வேண்டும். விளையாடும்போது பிறருக்குத் தொல்லை விளைவிக்கக் கூடாது. நேர்மையுடன் விளையாட்டு விதிகளுக்கு அமைந்து விளையாட்டுக்களில் பங்கேற்க வேண்டும்.

ஓடி விளையாடு பாப்பா என்று பாரதியார் பாப்பாக்களுக்குக் கூறுவதன் மூலம் ஏனையோரும் விளையாட்டுக்களில் பங்கு கொண்டு சோம்பலின்றிச் செயற்பட வேண்டும் என்றே விரும்புகிறார். அவரது வாக்குக்கிணங்க நாம் ஓடி விளையாடுவோம். உடல் நலம் பெறுவோம்.



31

# ஒலிம்பிக் விளையாட்டுக்கள்

ஒரு விளையாட்டு வீரன் இந்த உலகத்தில் பெறக்கூடிய மிகப் பெரிய விருது ஒலிம்பிக் போட்டிகளில் வெற்றி பெற்று வாங்குகிற தங்கப் பதக்கமாகத்தான் இருக்க முடியும். இந்த ஒலிம்பிக் விளையாட்டுப்போட்டி நான்கு வருடங்களுக்கு ஒரு முறை நடைபெறுகிறது. உலகின் எல்லா நாடுகளும் இந்த விளையாட்டுப் போட்டிகளிற் பங்கு கொள்கின்றன.

ஒலிம்பிக் விளையாட்டுப்போட்டி ஆரம்பமான வரலாறு மிகவும் சுவையானது. மிகப் பழமையானது. பண்டைக் காலத்திய ஒலிம்பிக் விளையாட்டுக்கள் பற்றி அதிகமான தகவல்கள் கிடைக்கவில்லை என்றாலும் ஒலிம்பிக் விளையாட்டு முதன் முதலில் கிரேக்க நாட்டின் தென்கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள ஒலிம்பிக் என்ற ஊரில் கி.மு. 776 ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டதென்பது உண்மையாகும்.

நான்கு வருடங்களுக்கு ஒரு முறை போட்டிகள் நடத்தப்பட்டன. முதலில் ஐந்து நாட்கள் நடத்தப்பட்ட இப்போட்டிகளை கிரேக்க நாட்டு மக்கள் பெருமளவில் கண்டுகளித்தனர். கி.பி. 394 ஆம் ஆண்டுக்குப் பின்னர் இப்போட்டிகள் நடத்தப்படுவது உரோமானியர்களால் நிறுத்தப்பட்டது. 1500 ஆண்டுகள் வரை இந்நிலை நீடித்தது. கி.பி. 1896 ஆம் ஆண்டிலிருந்து ஒலிம்பிக் விளையாட்டுக்கள் தொடர்ந்து நடைபெறுகின்றன.

கிரேக்கர்கள் இந்த விளையாட்டுக்களில் பங்கு கொள்வதை முக்கியமானதாகக் கருதுகின்றனர். ஒரு ஒலிம்பிக்குக்கும் அடுத்த ஒலிம்பிக்குக்கும் இடையில் உள்ள நான்கு வருடத்தை ஒரு “ஒலிம்பியாட்” என்று அழைத்தார்கள். நாடுகளுக்கிடையே போர் நடந்தால் ஒலிம்பிக் விளையாட்டுக்கள் நிகழும் சமயத்தில் தற்காலிகமாகப் போர் நிறுத்தம் மேற்கொள்ளப்பட்டது



கால் பந்தாட்டம், நீச்சல் போட்டி, ஓட்டப் பந்தயம், மல்யுத்தம், ஹொக்கி, பாஸ்கெட்போல், சைக்கிள் பந்தயம், குறிபார்த்துச் சுடுதல் ஆதியாம் விளையாட்டுக்கள் ஒலிம்பிக் போட்டியில் முக்கிய இடம் பெறுகின்றன. சர்வதேசிய ஒலிம்பிக் குழுதான் ஒவ்வொரு முறையும் ஒலிம்பிக் விளையாட்டு நடக்க வேண்டிய இடத்தைத் தெரிவு செய்கிறது. இக்குழுவில் தற்போது 146 நாடுகள் உறுப்பினராக இருக்கின்றன.

ஒலிம்பிக் விளையாட்டுக்கள் தொடங்கும் முதல் தினம் அமைப்பாளராக இயங்கும் நாட்டின் குழு விளையாட்டு ஆரம்பிக்கப்பட்டதைச் சம்பிரதாயப்பூர்வமாக அறிவிக்கும். முன்னைய ஒலிம்பிக் விளையாட்டின் அமைப்பாளரான நாடு ஒலிம்பிக் கொடியையும் ஐந்து வளையங்களையும் புது அமைப்பாளர் நாட்டுக் குழுவினரிடம் ஒப்படைக்கும். ஒலிம்பிக்கில் உள்ள ஜியஸின் கோயிலில் ஒலிம்பிக் தீபத்தை ஏற்றியபின் அது ஒலிம்பிக் விளையாட்டு நடக்கும் இடத்துக்கு கொண்டுவரப்படுகிறது. விளையாட்டுக்கள் முழுமையாக நடந்து முடியும்வரை அந்தத் தீபம் அணையாமற் காக்கப்படுகிறது.

ஒலிம்பிக் போட்டியின் தொடக்க நாளன்று விளையாட்டுகளில் பங்குகொள்ளும் நாடுகளின் குழுக்கள் அணிவகுத்துச் செல்லும். இப் பேரணிக்குக் கிரேக்க நாட்டுக் குழு தலைமை தாங்கும். பேரணியின் இறுதியில் அமைப்பாளர் நாட்டுக்குழுவும் இடையில் ஏனைய நாட்டுக்குழுக்களும் ஆங்கில எழுத்து வரிசைப்படி அணிவகுத்துச் செல்லும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக அமையும். இதன் பின்னர் போட்டிகளிற் பங்குபற்றுவோர் உறுதிமொழி எடுத்துக் கொள்வர். அதனைத் தொடர்ந்து அமைதிக்கு அறிகுறியாக வெண்புறாக்கள் சுதந்திரமாகப் பறக்கவிடப்படும். வண்ண வண்ண பலூன் களையும் பறக்கவிடுவர். ஒலிம்பிக் ஆட்டத்தின் கடைசி நாளன்று ஒலிம்பிக் தீபம் அணைக்கப்படும்.

ஒலிம்பிக் போட்டிகள் இன்று வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தனவாகக் கருதப்படுகின்றன. அகில உலகமும் அதனை மகிழ்ந்து போற்றுகிறது.



32

# ஈழத்துப் பெரியார் ஒருவர்

ஈழநாடு காலத்துக்குக் காலம் பல பெரியார்களைத் தந்துள்ளது. இலக்கியம், கல்வி, அரசியல், விஞ்ஞானம், சட்டம், வைத்தியம் ஆதியாம் பல்வேறு துறைகளில் புகழ் நிறுவிய பெரியார்கள் பலர் உளர். அத்தகையோரில் அரசியல், கல்வி, சமூகசேவை அனைத்துத் துறைகளிலும் ஒப்பற்ற சேவையாற்றித் தம் புகழ் நிறுவிய பெரியார்களில் சேர். பொன். அருணாசலம் குறிப்பிடத்தக்கவர்.

இவர் யாழ். மாவட்டத்தில் உள்ள மானிப்பாயில் புகழ் பூத்த குடும்பம் ஒன்றில் 1853 ஆம் ஆண்டு புரட்டாதி மாதம் பதினான்காம் நாள் பிறந்தார். பெரும் புகழ் பெற்று விளங்கிய பொன். குமாரசாமிக்கும். சேர். பொன். இராமநாதனுக்கும் இவர் தம்பியாவார். தமிழிற் சிறந்த புலமை பெற்ற இவர் ஆங்கிலம், கிரேக்கம், இலத்தீன், ஆரியம் ஆகிய மொழிகளிலும் சிறந்த பயிற்சி உடையவர். தமது இளமைக் கல்வியைக் கொழும்பு றோயல் கல்லூரியிற் பெற்றார். பின்னர் கேம்பிறிச் பல்கலைக்கழகத்தில் உயர் கல்வி கற்றுப் பட்டதாரியானார். சிவில் சேவைப் பரீட்சையில் முதன் முதலாகச் சித்தியெய்திய இலங்கையரும் இவரே.

இவர் இலங்கை அரசின் கீழ் நீதிமன்ற அலுவலர் பதவி தொட்டு நீதிபதி பதவி வரை பல பதவிகளை வகித்தார். இலங்கை குடிசன மதிப்பீடு தொடர்பாக இவர் வெளியிட்ட இலங்கைக் குடிசன சூசிகை, இவரது ஆற்றல்களை நன்கு வெளிக்காட்டின. ஆங்கிலேய அரசு இவரது திறமையை வியந்து "நைட்" என்னும் பட்டத்தை வழங்கிக் கௌரவித்தது.

அந்நிய ஆதிக்கத்தின் கீழிருந்து இலங்கை விடுதலை பெற வேண்டும் என்னும் விடுதலை உணர்ச்சி கொண்டவர்



சேர்.பொன். அருணாசலம் இதன் காரணமாக இவர் தமது அரச சேவையிலிருந்து ஓய்வு பெற்றதும் அடிமைத்தளையை அறுத்தெறியும் பணிகளில் ஈடுபட்டார். தமது அனுபவம் ஆற்றல்கள் அனைத்தையும் பயன்படுத்தி இலங்கை மக்கள் தம் நல்வாழ்வுக்காக அயராதுழைத்தார். பல்வேறு அரசியல் சீர்திருத்தங்களை நாடி நின்றார். இலங்கை சீர்திருத்தச் சங்கம். இலங்கை சமூகசேவைச் சங்கம் முதலிய பல்வேறு சங்கங்களுக்கு ஊடாக இவர் ஆற்றிய பணிகள் பல.

அரசியல், சமூகப்பணிகளோடு மட்டும் நின்றுவிடாது இவர் இலங்கை மக்களின் கல்வி வளர்சிக்காகவும் பாடுபட்டார். இலங்கையில் தாய்மொழிக் கல்விப் போதனைக்கு வித்திட்டவர்களில் இவரும் ஒருவர். இலங்கைக்குப் பூரணத்துவம் வாய்ந்த ஒரு பல்கலைக்கழகம் அமைக்கப்பட வேண்டும் என்று முதன் முதலில் குரல் கொடுத்தவரும் இவரே. இலங்கைப் பல்கலைக்கழகம் இவரது உழைப்பின் பேறாகவே உருவாகியது.

சைவசமயத்திற்கும், தமிழ்மொழிக்கும் அரும்பணியாற்றி யுள்ளார். சிறந்த சைவ சமயியாகவே அவர் இறுதிவரை வாழ்ந்தார். அன்னார் 1924 ஆம் ஆண்டு தை மாதம் ஒன்பதாம் திகதி இறைவன் திருவடிகளையடைந்தார். இவரது சிந்தனைத் தெளிவும் சிறந்த பண்பும் விடாமுயற்சியும் இந் நாட்டு மக்களுக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகும். அன்னாரது நினைவாக கொழும்பு மாநகரின் பழைய பாராளுமன்றக் கட்டட முன்றலில் அவரது உருவச்சிலை இன்றும் கம்பீரமாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது.



33

## உழைப்பே உயர்வுக்கு வழி

நல்லூரில் நாதன் என்னும் ஒரு விவசாயி இருந்தான். அவனுக்கு எழுபது வயது. முதுமையினால் உடல் தளர்ந்து போனான். கடுமையான வருத்தமும் பிடித்துக் கொண்டது. எழுந்து நடக்கவே முடியவில்லை. படுக்கையில் விழுந்து விட்டான். இனிமேல் தான் உயிர் பிழைப்பது அரிது என்று எண்ணினான்.

தனது நான்கு புதல்வர்களைப் பற்றியும் நினைத்தான். அவர்கள் உழைக்காமல் சோம்பேறிகளாக ஊர் சுற்றித்திரிவதை நினைத்துக் கவலைப்பட்டான்.

உழைப்பின் அருமையை அவர்களுக்கு உணர்த்த வேண்டுமென விரும்பினான். தனது நெல் வயல்களைப் பயன்படுத்தி வருடந்தோறும் நெல் விளைவித்தால் அவர்கள் சந்தோஷமாக வாழ முடியும், இதனை அவர்கள் எங்கே உணரப் போகிறார்கள் என்று கவலைப்பட்டான். சோம்பேறிப் புதல்வர்களை வயலில் இறக்கி உழுது பயிர் செய்ய வைக்க வேண்டும் என்று பல நாட்களாகச் சிந்தித்தான்.

ஒரு நாள் அவன் தன் புதல்வர்கள் நால்வரையும் தன் படுக்கையருகே வரவழைத்தான். அவர்களைப் பார்த்து "என் அருமைக் குழந்தைகளே! நான் வாழ்நாள் முழுவதும் பாடுபட்டுத் தேடிய செல்வம் முழுவதையும் ஒரு பெட்டியில் வைத்து நமது வயலில் ஓரிடத்தில் புதைத்து வைத்துள்ளேன். நான் இறந்தபின் நீங்கள் அந்தப் புதையலைத் தேடி எடுத்துச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளுங்கள" என்றான்.

இதனைக் கேட்டதும் புதல்வர்கள் நால்வரும் மகிழ்ச்சி யடைந்தனர். ஒருவன் தகப்பனைப் பார்த்து "அப்பா! நீங்கள் அந்தப் புதையலை வயலில் எந்த இடத்தில் புதைத்து



வைத்துள்ளீர்கள்" என்று கேட்டான். அதற்குக் கிழவன் "மகனே அதைத்தான் நான் மறந்துவிட்டேன். நமது வயலுக்குள் எங்கோ ஓர் இடத்திற்றான் இருக்கிறது. நீங்கள் தேடிப் பாருங்கள் கிடைக்கும்." என்றான்.

பத்து நாட்கள் சென்றபின் கிழவன் இறந்து போனான். அவனுடைய புதல்வர்கள் நால்வரும் கிழவனுடைய இறுதிக் கிரியைகளைச் சிறப்பாக நடத்தி முடித்தனர். பின்னர் ஒருநாள் புதல்வர்கள் நால்வரும் மண்வெட்டி, பிக்கான் போன்றவற்றுடன் வயலுக்குச் சென்றனர். வயல் முழுவதையும் ஆழமாகக் கொத்திப் புதையலைத் தேடினார்கள். புதையல் அகப்படவில்லை.

"இனி என்ன செய்வது? வயல் முழுவதையும் கொத்திவிட்டோம். இப்படியே விட்டால் சரியில்லை. பண்படுத்தி நெல் விதைப்போம். புதையல் கிடைக்கும் காலத்தில் கிடைக்கட்டும்." என்று மூத்த மகன் கூறினான். மற்றவர்களும் அதனை ஏற்றுக்கொண்டனர்.

நிலத்தை நன்கு பண்படுத்தினார்கள். நீர்ப்பாய்ச்சினார்கள். நெல் விதைத்தார்கள். அவர்களது நல்ல காலம் மழையும் காலம் தவறாது பெய்தது. நல்ல நெல் விளைச்சல் ஏற்பட்டது. தங்களுக்கு உணவுக்குத் தேவையான நெல்லை வைத்துக் கொண்டு மீதியை விற்றார்கள். பெருந்தொகைப் பணம் கிடைத்தது. அதை நால்வரும் சமமாகப் பிரித்தெடுத்தனர். தந்தை சொன்ன புதையல் இதுதான் என்று அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். தொடர்ந்தும் விவசாயத்தில் ஈடுபட்டு அதிக வருமானத்தைப் பெற்றார்கள். உழைப்பின் பயனே உண்மையான செல்வம் என்பதை அவர்கள் உணர்ந்து கொண்டார்கள்.

"உழைப்பே உயர்வுக்கு வழியாகும்"



34

## எனது வீட்டுப் பூந்தோட்டம்

எனது வீட்டு முற்றம் விசாலமானது. இம்முற்றத்தில் அழகான பூந்தோட்டம் ஒன்று அமைத்துள்ளேன். இப்பூந் தோட்டத்தில் உறோசா, நந்தியாவர்த்தம், நித்தியகல்யாணி, செவ்வந்தி, சூரியகாந்தி ஆதியாம் பூச்செடிகள் ஒழுங்கான முறையில் நடப்பட்டுள்ளன. அவை அழகிய மலர்களைத் தினந்தோறும் தருகின்றன. நறுமணம் வீசும் இம் மலர்களைக் காணும்போதெல்லாம் என் உள்ளம் மகிழ்வடைகிறது.

எனது வீட்டின் முன்றலில் மல்லிகைப் பந்தல் ஒன்றும் உள்ளது. அதில் மல்லிகை மலர்ந்து மணம் வீசுகிறது. வீட்டின் தாழ்வாரப் பகுதியில் இருபக்கத்திலும் பல இனக் குறோட்டன் செடிகள் நடப்பட்டுள்ளன. அவை பல வண்ண நிறங்கள் கொண்டவை. காலத்திற்குக் காலம் அவற்றை ஒரே அளவுக்குக் கத்தரித்து விடுவேன்.

நான் தினந்தோறும் அதிக நேரத்தை எனது பூந்தோட்டத்தில் செலவிடுகிறேன். பூமரங்களுக்கு நீர்ப்பாய்ச்சுதல், புல் பூண்டுகளைக் களைதல், பசளையிடுதல் ஆதியாம் வேலைகளையும் நானே மேற்கொள்கிறேன். எனது பொழுது போக்காக அதனை மேற்கொண்டு வருகிறேன். எங்கள் வீட்டிற்கு வரும் உறவினர்கள், நண்பர்கள் எல்லாம் எனது பூந்தோட்டத்தைப் பார்த்து “ஆகா! மிக்க அழகாயிருக்கிறது” என்று கூறுவார்கள். இதனைக் கேட்கக் கேட்க யான் மிக்க பெருமையடைகிறேன். அழகான பூக்களை யார்தான் விரும்பமாட்டார்கள்! மலர்களிடம் மனதைப் பறிகொடுப்பது வியப்பல்லவே.





35

## உயிர்களிடத்து அன்பு வேண்டும்

உயிர்களிடத்து அன்பு வேண்டும்” என்றார் அமரகவி பாரதியார். உயிர்கள் அனைத்தும் இறைவனின் படைப்புக்கள். அவை வெவ்வேறு வகையினவாயிருக்கலாம். ஆனால் அவை அத்தனையும் இறைவனது வடிவங்கள் என்றே நாம் கொள்ள வேண்டும். உயிர்கள் இன்பமும் துன்பமும் எய்துகின்றன. சிலர் உயிர்களை வேதனைப்படுத்துகின்றனர். அன்பு செலுத்துவதற்குப் பதிலாகத் துன்பம் செய்கின்றனர். அதன் மூலம் தாம் இன்பம் காண்கின்றனர். இந்நிலை முற்றாக ஒழிய வேண்டும்.

நமக்கு யாராவது அடித்தால் நாம் வேதனைப்படுகிறோம். பிற உயிர்களுக்கு நாம் துன்பம் செய்யும்போது அவை வேதனைப் படுகின்றன. அதனை நாம் உணர மறந்து விடுகிறோம்.

சில சிறுவர்கள் வண்ணத்துப்பூச்சி, பொன்வண்டு போன்றவற்றைப் பிடித்து நூலில் கட்டிப் பறக்கவிட்டு மகிழ்கிறார்கள். கிளியைப் பிடித்து அதன் இறகுகளை வெட்டி விடுகிறார்கள். மைனா, கிளி போன்றவற்றைப் பிடித்துக் கூடுகளில் அடைத்து விடுகிறார்கள். அவை தங்கள் இனத்தைப் பிரிந்து, சுதந்திரத்தை இழந்து தங்கள் துன்பத்தை வெளிப்படுத்த முடியாமல் கூடுகளில் கிடந்து தவிக்கின்றன.

ஒரு புறாவுக்காகத் தன் தசையினையே கொடுத்த சிபிச்சக்கரவர்த்தியையும், மானுக்காகப் பிணை நின்ற நபி பெருமானையும், ஆட்டுக்குட்டியின் துயர் போக்கிய புத்தர் பெருமானின் கருணையினையும் பற்றிய கதைகளை நாம் படித்திருக்கிறோம். ஆனால் அவர்கள் காட்டிய வழியைப் பின் பற்றுகிறோமா? உயிர்களிடத்துக் கருணைகாட்ட, அன்பு செலுத்தப் பின்னிற்கிறோம்.

எல்லா உயிர்களிலும் இறைவன் இருக்கிறான் என்ற உணர்வுடன் நாம் செயற்பட வேண்டும். பிற உயிர்களை நம் உயிர் போல் மதித்து வாழ்ந்திடப் பழகுதல் வேண்டும். அதுவே மிகச் சிறந்த வாழ்வு நெறியாகும்.



36

## நான் பார்த்த பொருட்காட்சி

நான் புங்குடுதீவு ஸ்ரீகணேச மகாவித்தியாலயத்தில் கல்வி பயில்கிறேன். எங்கள் பாடசாலையில் கடந்த பங்குனி மாதம் பத்தாம் திகதி (10-03-2001) கல்விப் பொருட்காட்சியொன்று நடைபெற்றது. பாலர் வகுப்பு மாணவர்கள் முதல் பதினொராம் வகுப்பு மாணவர்கள் வரை உருவாக்கிய பல்வேறு பொருட்களும், ஆசிரியர்கள் தயாரித்த கற்பித்தல் உபகரணங்களும், இக் கல்விப் பொருட்காட்சியில் இடம் பெற்றிருந்தன.

பாலர் வகுப்பு மாணவர்கள் பல்வேறு கழிவுப் பொருட்களைப் பயன்படுத்தி ஆக்கிய மாலைகள், பொம்மைகள் ஆகியனவும் அவர்கள் வரைந்த சித்திரங்களும் இக்காட்சியில் என் கவனத்தை ஈர்த்தன.

மூன்றாம் வகுப்பு மாணவர்கள் தாங்கள் விரும்பிப் பாடும் பாடல்களைத் தொகுத்து "எங்கள் புத்தகம்" என்ற பெயரில் காட்சிக்கு வைத்திருந்தனர். இவர்கள் தென்னம் குரும்பை, ஈர்க்கு ஆகியவற்றைப் பயன்படுத்தி அழகிய தேர்களையும் ஆக்கியிருந்தனர். "தேர் வருகுது தேர் வருகுது" என்ற தலைப்பில் இத்தேர்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தமை பார்வையாளர்களைப் பெரிதும் கவர்ந்தன.

எங்கள் வகுப்பு மாணவர்கள் (தரம் ஆறு) இலங்கையின் வடிவமைப்பைக் களி மண்ணினாற் செய்து அழகிய நிறம் தீட்டியிருந்தனர். இதில் மகாவலிகங்கை, பீதுருதாலகாலமலை, சிவனொளிபாதம் போன்றவற்றையும் குறிப்பிட்டுக் காட்டியிருந்தனர்.

பத்தாம் பதினொராம் வகுப்பு மாணவர்கள் மீனவர்களின் தொழிலைச் சித்திரிக்கும் வகையில் கடலில் மீன்பிடித் தொழில் நடைபெறும் முறையினைப் பல்வேறு உருவங்களின் மூலம் அழகுற அமைத்திருந்தனர். தற்போதைய சூழ்நிலைக்கு அமைய இது அமைந்தமை குறிப்பிடத்தக்கது.



எங்கள் பாடசாலை மாணவியர்கள் தயாரித்த மனையியற் பொருட்களும் கைப்பணிப் பொருட்களும் இப் பொருட்காட்சியில் முக்கிய இடம் பெற்றன. ஆசிரியர்கள் ஆக்கிய கற்பித்தல் உபகரணங்கள் மாணவர்களுக்கும், பார்வையாளர்களுக்கும் பெரும் பயன் நல்குமென்பது திண்ணம். எங்கள் விஞ்ஞான பாட ஆசிரியை ஆக்கிய கற்பித்தல் உபகரணங்களை நாங்கள் ஆர்வத்துடன் பார்த்து மகிழ்ந்தோம்.

கோட்டக்கல்வி அதிகாரி, கல்விப்பணிப்பாளர் ஆகியோர் இப் பொருட்காட்சிக்குப் பிரதம அதிதிகளாக அழைக்கப் பட்டிருந்தனர். அவர்கள் எங்கள் பாடசாலையில் நடைபெற்ற இப் பொருட்காட்சியைப் பார்வையிட்டுப் பெரிதும் பாராட்டினர்.



37

## குடையின் சுயசரிதை

இன்று குப்பை மேட்டில் நான் தேடுவாரற்றுக் கிடக்கிறேன். அன்று நானிருந்த நிலையினை எண்ணிப் பார்க்கும் போது வேதனையால் வாடுகிறேன். என் கதையைக் கேட்க நீங்கள் விரும்புவீர்கள். சொல்கிறேன். கேளுங்கள்.

நான் இங்கிலாந்தில் உள்ள தொழிற்சாலை ஒன்றில் உருவாகினேன். பல வர்ணங் கொண்ட என்னைப்போல் அங்கு பல்லாயிரக் கணக்கானோர் உருவாக்கப்பட்டனர். எங்களை எல்லாம் ஒன்று சேர்த்து ஒரு நாள் பல லொறிகளில் ஏற்றினார்கள். துறைமுகம் ஒன்றிற்கு அனுப்பி வைத்தார்கள். அங்கிருந்து எங்களை எல்லாம் கப்பலில் ஏற்றினார்கள். சில நாட்கள் கப்பலில் பயணம் செய்தோம். பின்னர் கொழும்புத் துறைமுகத்தை வந்து சேர்ந்தோம்.

கொழும்புத் துறைமுகத்திலிருந்து எங்களைக் கடை முதலாளி ஒருவர் லொறி ஒன்றில் ஏற்றிச் சென்றார். அவர் தமது கடையில் எங்களையெல்லாம் அலுமாரிகளில் பத்திரமாக அடுக்கி வைத்தார். ஒருநாள் பெண்மணி ஒருவர் நான் இருந்த

கடைக்கு வந்தார். என்னைப் பணம் கொடுத்து வாங்கிச் சென்றார். அவர் தமது அருமைப் பேரனுக்கு என்னைக் கொடுத்தார். அவன் என்னை அன்பாக எடுத்து விரித்துப் பார்த்தான். "ஆகா! அழகானகுடை" என்று கூறி மகிழ்ந்தான். அச் சிறுவன் என்னைப் பத்திரமாகப் பேணிவந்தான். பாடசாலைக்குச் செல்லும் போதெல்லாம் தனது புத்தகங்களுடன் என்னையும் எடுத்துச் செல்வான் மழை, வெயில் எதற்கும் என்னைப் பயன்படுத்தினான்.

ஒருநாள் மாலை வேளை அச்சிறுவன் என்னை எடுத்துக் கொண்டு கடைக்குப் போனான். அங்கு பல வகையான பொருட்களை வாங்கினான். பொருட்களை எடுத்துக் கொண்டு வீடு திரும்பினான். ஞாபகமின்றி என்னைக் கடையில் விட்டுச் சென்று விட்டான். அவ்வேளையில் அங்கு வந்த மற்றொரு சிறுவன் என்னை எடுத்துச் சென்றுவிட்டான். அவன் என்னைப் பத்திரமாகப் பேணிவந்தான். ஒரு நாள் வீட்டு மேசையின் மேல் என்னை வைத்துவிட்டுப் பாடசாலைக்குச் சென்றுவிட்டான். அன்றிரவு மேசையின் மேல் இருந்த என்னை எலியொன்று பதம் பார்த்து விட்டது. அதன் கூரிய பற்களுக்கு எனது உடலின் சில பகுதிகள் இரையாகி விட்டன. மறுநாள் காலை அச்சிறுவன் என்னை எடுத்து விரித்தான். ஐயோ! பாவம், என் கோலத்தைக் கண்டதும் அவன் அழுதேவிட்டான். தனது தாயாரிடம் ஓடோடிச் சென்று முறையிட்டான். என் செய்வது? என் நிலையைக் கண்டு அவனது தாயாரும் கவலைப்பட்டார். அச்சிறுவனுக்கு ஆறுதல் கூறி அழைத்துச்சென்றார்.

நாட்கள் சென்றன. நான் ஒரு மூலையில் கிடந்தேன். எனது நிலை பெரும் கவலைக்கிடமாகி விட்டது. நாள்தோறும் பூச்சிகளும், எலிகளும் என்னைப் பதம் பார்த்தன. ஒரு நாள் அவ் வீட்டுக்காரப் பெண்மணி என்னைத் தூக்கி இக்குப்பை மேட்டில் வீசிவிட்டார். இங்கு நான் தேடுவாரற்றுக் கிடக்கின்றேன். எனது இன்றைய நிலையை எண்ணும் போது மிக்க வேதனை ஏற்படுகிறது. என் கவலையைப் போக்குவார் யாருளர்?





38

## இளமையிற் கல்

அரிது, அரிது மானிடராதல் அரிது என்றார் ஔவையார். மனிதப் பிறவி ஓர் அற்புதமான பிறவி. இறைவனின் படைப்பில் இப்பிறவியே மிக மிக அற்புதமானது. இப்பிறவி எடுத்த நாம் பல்வேறு பருவங்களை அடைகிறோம். சிசுவாக, மழலையாக, குழந்தையாக, சிறுவனாக, வாலிபனாக பின் முதியவராகப் பல்வேறு பருவங்கள் மனிதவாழ்வில் வந்துகொண்டே யிருக்கின்றன.

இவற்றுள் இளமைப் பருவமே மிகவும் இன்பகரமானது. இப்பருவத்தில் நாம் மிக்க பொறுப்புடனும் விழிப்புடனும் நடந்து கொள்ள வேண்டும். பிற்கால வாழ்வுக்கு வேண்டிய பயிற்சியையும் அறிவையும் இளமைக் காலத்திலேயே நாம் தேடிக்கொள்ளுதல் வேண்டும். முக்கியமாகக் கல்விச் செல்வத்தைத் தேடிக் கொள்ளுதற்குரிய காலம் இளமைக் காலமே. எனவே இளமையிற் கல்வியில் நாம் கூடிய கவனம் செலுத்த வேண்டும். "இளமையிற் கல்வி சிலையில் எழுத்து" என்பது முதுமொழி. இளமையில் நாம் பெறும் கல்வி அறிவு பசுமரத்தாணிபோல் நமது உள்ளத்தில் பதியும்.

இக்காலத்தில் நல்ல, வல்ல அறிஞர்களின் தொடர்பினை நாம் பெற்றுக்கொள்ள முயல வேண்டும். நல்லவர்கள் தொடர்பு நன்மை தரும். தீயவர்கள் தொடர்பு தீமையினையே தரும். ஆதலால் நல்லவர்களுடன் நாம் தொடர்பேற்படுத்திக் கொள்ளுதல் வேண்டும்.

இளமைக் காலம் நமது வாழ்க்கையில் ஒரு முறையே வரும். அக்காலத்தை நன்முறையில் பயன்படுத்திக் கற்க வேண்டியனவற்றைக் கற்று, கற்றபடி ஒழுக நாம் முயற்சிக்க வேண்டும்.



39

# நோபல் பரிசு

நோபல் பரிசு ஆண்டுதோறும் வழங்கப்படுகிறது. இப்பரிசு பெறுவோரின் பெயர்கள் அறிவிக்கப்பட்டதும் அவர்கள் புகழேணியின் உச்சியை அடையும் அளவுக்கு அவர்களைப் பற்றிய செய்திகள் வெளியாகின்றன. உலகத்தில் உள்ள எல்லாச் செய்தித்தாள்களிலும், சஞ்சிகைகளிலும் அவர்களைப் பற்றிய விபரங்கள் பெரிய அளவில் பிரசுரமாகின்றன. வானொலியும், தொலைக்காட்சியும் அவர்கள் புகழ்பாடுகின்றன. அந்த அளவுக்குப் பரபரப்பூட்டும் நோபல் பரிசை வழங்குதற்கு வழிவகுத்தவர் ஒரு விஞ்ஞான மேதையாவார். அவர் சுவீடன் நாட்டைச் சேர்ந்தவராவார். அவரது முழுப்பெயர் ஆல்பிரட்பெர்ன் ஹெர்ட் நோபல் என்பதாகும்.

உலகப் புகழ் பெற்ற இப் பெரியார் 1833 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 21 ஆம் திகதி பிறந்தார். சோவியத் நாட்டில் உயர் கல்வி பயின்றார். விஞ்ஞானத் துறையில் மிக்க ஆர்வம் காட்டினார். புதியன கண்டு பிடிப்பதில் இவரது கவனம் சென்றது. இதன் பயனாக வெடிமருந்தைக் கண்டுபிடித்தார். இம்மகத்தான கண்டுபிடிப்பானது பாறையைப் பிளக்கவும், பெற்றோல் கிணறுகளைத் தோண்டவும் பயன்படுகிறது. போரில் பயங்கர அழிவையும் ஏற்படுத்துகிறது.

நோபலின் பெரும் செல்வத்துக்கும் புகழுக்கும் காரணம் அவர் கண்டுபிடித்த வெடிமருந்தேயாகும். இதனால் இவரது புகழ் உலகெங்கும் பரவியது. பெரும் செல்வம் குவிந்தது. இவர் இறக்கும்போது விட்டுச் சென்ற பணம் 9,20,000 டொலர்களாகும். இவ்வளவு செல்வத்தையும் நல்ல முறையில் பயன்படுத்த அருமையான உயில் ஒன்றையும் அவர் எழுதி வைத்தார். இதிலிருந்து கிடைக்கும் வட்டியைக் கொண்டு ஐந்து பரிசுகள் ஏற்படுத்தினார். பௌதிகம், இரசாயனம், மருத்துவம், இலக்கியம், அமைதி ஆகிய துறைகளில் சீரிய பணியாற்று பவர்களுக்கு இத்தொகை கிடைக்க வழி செய்தார். இப்பரிசுகள் அவரது பெயராலேயே வழங்கப்படுகிறது.



சுவீடனில் உள்ள நோபல் பவுண்டேசன் என்னும் நிறுவனத்தால் நோபல் பரிசு வழங்கப்படுகிறது. ஒவ்வொரு துறைக்குமான பரிசுகளை வெவ்வேறு நிறுவனங்கள் தேர்ந்தெடுக்கின்றன. நோபல் பரிசு பெறுவோருக்குத் தங்கப்பதக்கமும், சான்றிதழும், பெருந்தொகைப் பணமும் அளிக்கப்படுகின்றன. நோபல் பரிசு பெற்ற பேரறிஞர்கள் பலர் இவர்களுள் அணுசக்தியைக் கண்டறிந்த விஞ்ஞானி ஆல்பர்ட் ஐன்ஸ்டைன், பிரபல நாடகாசிரியர் ஜோர்ஜ் பெர்னாட் ஷா, மகாகவி இரவீந்திரநாததாகூர், பிரபல இந்திய விஞ்ஞானி சேர். சி.வி. இராமன், அன்னை தெரேசா, அமர்த்தியா சென்; ஐக்கிய நாடுகள் சபைச் செயலாளர் நாயகம் கோபி அனான் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

நோபல் பரிசுடன் நோபலின் பெயரும் உலகெங்கும் பரவியுள்ளது.



40

# செஞ்சிலுவைச் சங்கம்

மனிதகுலத்தின் துன்பம் துடைக்கும் தூயபணியில் ஈடுபட்டுள்ள சமூக சேவை நிறுவனங்கள் பல உள. இவற்றுள் செஞ்சிலுவைச் சங்கம் முதலிடம் வகிக்கிறது. “றெட்குறொஸ்” என்று அழைக்கப்படும் இவ்வமைப்பு மதம், நிறம், நாட்டினம் என்ற வேறுபாடின்றி மனித குலத்தின் துயர் போக்கும் பணியில் துடிப்புடன் செயலாற்றுகிறது. போர்க்காலத்திலும் அமைதிக்காலத்திலும் பணிபுரியும் இவ்வமைப்பின் கிளைகள் உலக நாடுகள் அனைத்திலும் உண்டு.

போரில் காயப்பட்ட படைவீரர்களைக் கவனித்துக் கொள்வதற்காக உருவாக்கப்பட்ட இவ்வமைப்பானது இன்று உலகம் முழுவதிலும் உள்ள மக்களுக்கு உதவி அளித்து வருகிறது. அமைதிக்காலத்தில் முதலுதவி தருதல், விபத்துக்களைத் தடுத்தல், குடிநீரைப் பாதுகாத்தல், தாதிகளுக்குப் பயிற்சி அளித்தல், தாய்-சேய் நல மையங்களைப் பேணுதல், மருத்துவமனைகளை நிறுவுதல், இரத்த வங்கி அமைத்தல் ஆதியாம் பணிகளில் இவ் அமைப்பு ஈடுபடுகிறது.

செஞ்சிலுவைச் சங்கத்தை நிறுவியவர் ஜீன் ஹென்றி டுனண்ட் என்பவராவார். அவர் 1859-06-20 ஆம் திகதியன்று வர்த்தக விடயமாக லாவார்டி நகருக்குச் சென்றிருந்தார். அக்காலத்தில் ஆஸ்திரியாவுக்கும் பிரான்சுக்குமிடையே கடும்போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. இப்போரில் லாவார்டி நகரம் பெரும் தாக்குதலுக்கு இலக்கானது. ஆயிரக்கணக்கான மக்கள் போரின் கொடுமையால் அவதியுற்றனர். முதலுதவி கிட்டாததல் அநேகர் மாண்டனர். நெஞ்சை நெகிழ வைக்கும் இந்த அவலக்காட்சிகள் ஹென்றியின் மனத்தைப் பெரிதும் பாதித்தன. அவர் தனது சொந்த வேலையை மறந்தார். துன்பமுற்ற மக்களின் துயர் போக்கும் பணியில் தம்மை ஈடுபடுத்திக்கொண்டார். இதனால் பலரது உயிரைப் பாதுகாத்தார்.

இப்போர் முடிவுற்றதும் ஹென்றி உலக மக்களுக்கு உருக்கமான வேண்டுகோள் ஒன்றினை விடுத்தார். "போரில் காயமுறும் வீரர்கள் எந்தக் குறிப்பிட்ட நாட்டையும் சேர்ந்தவர் களல்ல. போர்க்களத்தில் நாதியற்ற இந்த வீரர்களுக்கு மனிதாபிமானத்துடன் சேவை செய்வது மனித குலத்தின் கடமையாகும்" என்று அவர் தமது வேண்டுகோளில் குறிப்பிட்டார். இதன் பயனாக 1864 இல் ஜெனீவாவில் அனைத்துலக மகாநாடொன்று நடைபெற்றது. அதில் 14 நாடுகள் செஞ்சிலுவை அமைப்பை நிறுவ ஒப்புதல் வழங்கின. வெள்ளை நிற நிலைக்களனில் சிவப்புநிறச் சிலுவை பொறித்த (றெட்குறொஸ்) கொடியே செஞ்சிலுவைச் சங்கத்தின் கொடியாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. செஞ்சிலுவை அமைப்புக்கு மூன்று உறுப்புக்கள் உள்ளன. முதலாவது செஞ்சிலுவைச் சங்கத்தின் அனைத்துலகக் குழு. இதன் தலைமைச் செயலகம் ஜெனீவாவில் உள்ளது. இரண்டாவது செஞ்சிலுவைச் சங்கங்களின் சபை. மூன்றாவது தேசிய செஞ்சிலுவைச் சங்கங்கள்.

போர்க்காலங்களில் செஞ்சிலுவையின் அனைத்துலகக் குழு போரில் ஈடுபட்ட நாடுகளுக்கும், தேசிய செஞ்சிலுவைச் சங்கங்களுக்கும் நடுவராகச் செயலாற்றும். போர்க்கைதிகளின் நலனைப் பேணும். இவ்வமைப்பானது பெரும்புயல், கொள்ளைநோய், பஞ்சம் போன்றவற்றிலிருந்து மக்களைக் காத்திடப் பெரும் பணியாற்றுகிறது.







## மலர்கள்

மலர்கள் அழகானவை. அவை மனதுக்கு மகிழ்ச்சியையும் கண்ணுக்குக் கவர்ச்சியையும் நல்குகின்றன. மலரை விரும்பாதோர் எவருமிலர். மனிதர் முதல் வண்டுகள் வரை மலர்களின் அழகில் மயங்கி விடுகின்றனர்.

இறைவனின் படைப்பில் ஆயிரமாயிரம் மலர்கள் இப்பூமியில் மலர்கின்றன. அவை பல வடிவங்களிலும் வண்ணங்களிலும் பூத்துக்குலுங்குகின்றன. நறுமணம் வீசி மக்கள் மனதைக் கொள்ளை கொள்ளுகின்றன. தாமரை, மல்லிகை, முல்லை, உறோசா போன்றன நாம் விரும்பும் மலர்களில் சிலவாகும்.

மலர்களால் மக்கள் பெரும் பயனடைகின்றனர். மக்களை மட்டுமன்றித் தேனீக்களையும் மலர்கள் கவருகின்றன. தேனருந்தும் தேனீக்களின் மூலம் மகரந்தச் சேர்க்கை ஏற்படுகின்றது. மலர்கள் மாலையாகின்றன. மக்கள் கருமங்களுக்கு அவை பெரிதும் பயன்படுகின்றன. வாசனைத் திரவியங்கள் வடித்தெடுக்கவும் மலர்கள் உதவுகின்றன. மலர்களால் மக்கள் வருமானத்தைப் பெறுகிறார்கள். பலநாட்களுக்கு வாடாத மலர்களைப் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். இதனால் வெளிநாட்டுச் செலவாணியும் பெற முடிகிறது.

இறைவனின் திருமுடியையும் மலர்கள் அலங்கரிக்கின்றன. மன்னர் முதல் சாதாரண மக்கள் வரை மலர்களை அணிந்து கொள்கிறார்கள். குறிப்பாகப் பெண்களின் கூந்தல்களை மலர்கள் அழகுபடுத்துகின்றன.

மலர்களின் சிறப்பினைப் பற்றிப் பாடாத புலவர்களே இல்லை எனலாம். அவ்வளவுக்குப் புலவர்களின் உள்ளங்களைக் கவர்ந்துள்ளன மலர்கள்.

மணம் வீசும் மலர்களை நாமும் மகிழ்ந்து பாடிப் போற்றுவோம்.

"வானை நோக்கி மலர்ந்திடும்
வாச முள்ள பூக்களாம்
தேனை உண்ண வண்டுகள்
தேடி வரும் பூக்களாம்.

பட்டுப் போல பூக்களே
பார்க்க அழகு தந்திடும்
மொட்டு அவிழும் பூவைப்போல்
முகம் மலர்ந்து இருப்போமே"



42

## சாரணர் இயக்கம்

பிறர் நலன் கருதிப் பணியாற்றும் சமூக சேவை இயக்கங்களில் சாரணர் இயக்கம் தலை சிறந்தது. பிறருக்கு உதவி செய்தல், எல்லா உயிர்களிடத்தும் அன்பாயிருத்தல், பெரியோருக்குக் கீழ்ப்படிதல் ஆதியாம். நற்பண்புகளை வளர்ப்பதற்கு இவ்வியக்கம் பெரிதும் உதவுகிறது.

'எப்பொழுதும் உதவி செய்ய ஆயத்தமாயிரு' என்னும் இலட்சியத்துடன் செயற்படும் இவ்வியக்கம் இன்று உலக நாடுகள் பலவற்றிலும் சிறப்புறச் சேவையாற்றுகிறது.

சேர் றொபேட் பேடன் பவுல் என்னும் ஆங்கிலேயரால் ஆரம்பிக்கப்பட்ட இவ் இயக்கமானது சாதி, மத, இன பேதமின்றி மக்களுக்குத் தொண்டாற்றுகிறது. சாரணர்கள் உண்மை பேசுபவர்களாகவும் கீழ்ப்படிவுள்ளவர்களாகவும் பிற உயிர்களிடத்து அன்புடையவர்களாகவும் இருத்தல் வேண்டும்.

சாரணர்கள் மூன்று அணிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளனர். ஆறு வயது முதல் பதினொரு வயதுவரை உள்ளவர்கள் முதலாவது அணியிலும், பதினொரு வயதுக்கு மேல் பதினெட்டு வயதுவரை உள்ளவர்கள் இரண்டாவது அணியிலும், பதினெட்டு வயதுக்கு மேற்பட்டோர் மூன்றாவது அணியிலும் இருப்பர்.



சாரணர் தமக்குரிய சீருடையினை அணிந்து சின்னங்களைச் சூடியிருப்பர். அவர்கள் பிறருக்கு வணக்கம் செய்யும்பொழுது தங்கள் இடது கையில் பெருவிரலையும் சிறு விரலையும் மடக்கிக் கொண்டு ஏனைய மூன்று விரல்களாலும் வணக்கம் செய்வார்கள். சாரணன் ஒருவன் மற்றொரு சாரணனைச் சந்திக்கும் பொழுது இடக்கையால் கைகுலுக்கி மரியாதை செலுத்துவான்.

சாரணர் இயக்கத்தில் சாரணர் ஒருவர் சேர்ந்து கொள்ளும் போது மூன்று உறுதிமொழிகளை எடுத்துக் கொள்ள வேண்டும். "நான் கடவுளுக்கும் எனது தாய்நாட்டிற்கும் என்னால் இயன்ற கடமையைச் செய்வேன் என்றும், எப்பொழுதும் பிறருக்கு உதவி செய்ய ஆயத்தமாயிருப்பேன் என்றும், சாரணர் இயக்கத்திற்குரிய சட்டங்களுக்கு அடங்கி நடப்பேன்." என்றும் அவர்கள் உறுதிமொழி பகருதல் வேண்டும். இவ்வுறுதி மொழிகளை என்றும் நினைவூட்டும் வகையிலே சாரணர்கள் தமது வணக்கத்தை மூன்று விரல்களாலும் செலுத்துகின்றனர்.

மக்கள் பெருந்திரளாகக் கூடும் வைபவங்களிலும் ஆலய உற்சவங்களிலும், மற்றும் பொது நிகழ்ச்சிகளிலும் சாரணர்கள் சேவையாற்றுவதை நாம் காண்கிறோம். பிறர் நலன் பேணுதல், ஆபத்துக் காலத்தில் உதவி அளித்தல் ஆகியன சாரணர்களின் தலையாய இலட்சியங்களாகும். இவர்கள் முதலுதவி அளித்தல், நீந்துதல், போன்றவற்றில் தேர்ச்சியுடையவர்களாகவும் இருத்தல் வேண்டும்.

நமது நாட்டில் உள்ள பாடசாலைகள் பலவற்றில் சாரணர் இயக்கம் சிறந்த முறையிற் செயற்படுகிறது. பல்லாயிரக்கணக்கான மாணவர்கள் இவ்வியக்கத்தில் சேர்ந்துள்ளனர். உலக நாடுகள் பலவற்றில் நிகழ்ந்த சாரணர் விழாக்களில் நமது நாட்டுச் சாரணர்கள் பங்குகொண்டு தமக்கும் நாட்டுக்கும் பெருமைதேடியுள்ளனர். நற்பிரசைகளை உருவாக்கும் சாரணர் இயக்கத்திற் சேர்வதன் மூலம் நாம் பிறருக்கு உதவி செய்பவர்களாக, நல்லவர்களாக, வல்லவர்களாக வாழ முடியும்.



## 43

# நான் விரும்பும் நூல்

நான் விரும்பும் நூல் திருக்குறள் என்னும் திருநூலாகும். இந்நூல் வள்ளுவப் பெருந்தகையால் இயற்றப்பட்டது. இது முப்பெரும் பிரிவுகளையுடையது. அவையாவன அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்பவையாகும். ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களை நூற்றுமுப்பத்து மூன்று அதிகாரங்களாக வகுத்திருக்கின்றார். ஒவ்வொரு குறள் முத்துக்களும் சொற்செறிவும், பொருட் சுருக்கமும் கொண்டனவாய், கேட்கக் கேட்க இன்பம் பயப்பனவாய் விளங்குகின்றன. இந்நூலின் அருமை பெருமையை உணர்ந்த மக்கள் இதனை ஒரு தெய்வ நூலாக மதிக்கின்றனர். வள்ளுவனது திருக்குறளால் தமிழ்நாடு சிறப்படைந்தது. இதனைப் பாரதியார் "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு" என்று கூறுகின்றார்.

திருக்குறள் மக்களுக்கு உலக நீதியை எடுத்தியம்புகிறது. ஒவ்வொரு செய்யுளும் ஆழ்ந்த கருத்தைத் தன்னகத்தே உடையதாக அமைந்துள்ளது. படிக்கப்படிக்க வெறுப்பின்றி மக்கள் மனதில் பதிந்து அவர்களை நல்வழிப்படுத்தும் பெருமையுடையதாக அமைந்துள்ளது. ஒவ்வொரு செய்யுளும் எண்ணற்ற உண்மைகளை எடுத்துக் காட்டுகிறது. திருவள்ளுவரின் திறமையை உலகுக்கு எடுத்துக் காட்டும் உன்னதக் கருத்தோவியமாகிறது.

கடவுள் வாழ்த்து, மக்கள் தாம் செய்யும் எக்கருமத்தையும் திறம்பட நடாத்த வேண்டும் என்னும் எண்ணத்தோடு அமைந்துள்ளது. அதன்படியே வள்ளுவரும் திருக்குறளில் கடவுள் வாழ்த்தை முதலாவதாக அமைத்துள்ளார். அதிலிருந்து ஒவ்வொரு அதிகாரமும் மனிதனை அறிவுள்ளவனாகவும் சிறந்தவனாகவும் ஆக்குவிக்க வேண்டும் என்னும் எண்ணத்தோடு தொடர்புற அமைக்கப்பட்டுள்ளது.

திருமால் இரு அடிகளால் உலகளந்தார். திருவள்ளுவரோ திருக்குறளை ஒன்றே முக்கால் அடிகளால் ஆக்கி உலகளந்த



பெருமைக்குள்ளாகின்றார். கடுகு சிறிது காரம் பெரிது என்றாற் போன்று திருக்குறளும் சிறிய செய்யுள் வடிவில் இருப்பினும் அதன் கருத்துக்களோ சிறந்தனவாகின்றன.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக"

என்னும் வள்ளுவன் வாக்கிற்கமைய நாம் பிழையின்றிக் கற்க வேண்டும். நாம் கற்பதோடு மட்டும் நில்லாது அவற்றின் படி ஒழுகவும் பழகிக் கொள்ள வேண்டும். அவ்வாறின்றி பொழுதுபோக்காகத் திருக்குறளைக் கற்போமாயின் யாது பயனையும் அடைய மாட்டோம். திறம்படத் திருக்குறளைக் கற்போமாயின் சிறந்த அறிவாளியாக விளங்குவோம். உலக மக்களும் எம்மைப் போற்றுவர்.

திருக்குறளின் ஒப்பற்ற பெருமையினை, அருமையினை நன்குணர்ந்தே நான் இந்நூலை விரும்புகிறேன். தினந்தோறும் படிக்கிறேன். .

"கற்றாங்கு ஒழுகு" என்பதற்கமையத் திருக்குறளைக் கற்று அதன் வழி ஒழுக மாணவர்களாகிய நாம் பழகிக் கொள்ளுதல் வேண்டும்.



## 44

# சாந்தி நிலவ வழி

மனிதன் நிம்மதியாகவும் மகிழ்ச்சிகரமாகவும் வாழ வழிவகுப்பது சாந்திநிலவும் சூழ்நிலையேயாகும். சாந்தி என்பது அமைதி என்னும் கருத்தில் அமைந்த ஒரு சொல்லாகும். முதலிலே குடும்பத்தில் தோன்றிய சாந்திநிலவுஞ் சூழ்நிலை சமுதாயம், நாடு, உலகம் என்று விரிந்து கொண்டேபோகும்.

அமைதியானது முதலிலே ஒருவருடைய மனத்திலே எழ வேண்டும். இதனை நற்பழக்கங்களாலும், பெரியோர் தம் நட்பினாலும், தெய்வ நம்பிக்கையாலும் சிறந்த நூல்களை வாசிப்பதாலும் ஏற்படுத்திக் கொள்ளலாம்.

குடும்ப உறுப்பினர் ஒருவருடைய மனத்திலே ஏற்பட்ட அமைதி குடும்ப அங்கத்தவர்களிடையே பரிணமிக்கின்றது. ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்குந் தன்மையும் அன்புடைமையும், மற்றவர் சொல்வதைக் கேட்குந் தன்மையும் குடும்பச் சூழலிற் சாந்தி நிலவ வழி வகுக்கும்.

எமது சமுதாயத்தில் எல்லோரும் எல்லாம் பெற்று இல்லாமை இல்லாமற் போக வேண்டும். இப்படியிருந்தால் உலகம் உய்யும். ஏட்டுக்கல்வியை மட்டும் கற்று அரச பதவிகளைமட்டும் நம்பியிருப்பதை விடுத்து தொழிற்கல்வியை, விவசாய அறிவை நாம் பெற வேண்டும். காடு, கரம்பைகளைத் திருத்திக் கழனிகளாக்க வேண்டும். பயன்தரும் பயிர் வகைகளைத் தரிசு நிலங்களெங்கும் பயிரிட வேண்டும். பசுமைப்புரட்சியை உருவாக்க வேண்டும். இதனால் வேலையில்லாத்திண்டாட்டம் ஒழியும், பொருளாதாரம் சிறக்கும், நாட்டில் சாந்தி நிலவ வழிபிறக்கும். விரக்தி மனப்பான்மை மறையும்.

இன்று உலகில் சமய, இன, நிற வேறுபாடுகள் மனித குலத்தின் சாந்திக்கு ஊறு விளைவிக்கின்றன. இவற்றிற்கெல்லாம் அன்பு வழியில் நாம் தீர்வு காண வேண்டும். "உன்னைப் போல் உன் அயலவனையும் நேசி" என்ற இயேசுகிறிஸ்துவின் போதனைகளையும், 'எதிரியையும் மன்னித்தருள வேண்டும்' என்னும் அண்ணல் மகாத்மாவின் அருளுரையினையும் கருத்திற் கொண்டு நாம் செயற்பட வேண்டும். "புதியதோர் உலகம் செய்வோம், கெட்ட போரிடும் உலகத்தை வேருடன் சாய்ப்போம்" என்ற புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் முழக்கத்திற்கேற்ப இந்த உலகின் போக்கினை நாம் மாற்றிட வேண்டும். மனிதப் பண்புகளை மதித்து வாழும் நிலையினை உருவாக்கிட வேண்டும்.

மனிதன் மனிதனாக, மானுடத்தன்மையின் பிரதிபலிப்பாக என்று மாற்றம் பெறுகிறானோ அன்று தான் இவ்வுலகில் சாந்தி நிலைபெறும். அத்தகைய சூழ்நிலையினை உருவாக்கிட உலகமக்கள் அனைவரும் உண்மையுணர்ந்து உழைத்திட முன்வரவேண்டும்.





45

# தேசிய விளையாட்டுக்களும் அவற்றின் நன்மைகளும்

"சுவர் இருந்தாற்றான் சித்திரம் வரையமுடியும்". "ஆரோக்கியமான மனம் ஓர் ஆரோக்கியமான உடலிற்றான் இருக்கும்" என்பன முதுமொழிகள்.

இம்முது மொழிகளுக்கேற்ப எம்மைத் தேக பலத்துடனும் மனோபலத்துடனும் வைத்திருக்க உதவுபவை விளையாட்டுக்களே. வாழ்க்கையில் ஏற்படும் பல பிரச்சினைகளைத் தீர்க்கவும், விளைவுகளைப் பெருந்தன்மையுடன் ஏற்கவும், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையை ஏற்படுத்தவும், தலைவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவும் உறுதுணை புரிபவை விளையாட்டுக்களே.

முற்காலத்திலே யானை ஏற்றம், குதிரை ஏற்றம், தேரோட்டம், விற்போர், மற்போர், வாட்போர், சிலம்பம் என்பன விளையாட்டாகவும் விளையாடப்பட்டன; போரிடவும் பயன்பட்டன. இவற்றை இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களிலிருந்து நாம் அறியலாம். இவைதவிர, வீரத்தைப் புலப்படுத்தும் "ஏறு தழுவுதல்" போன்ற விளையாட்டுக்களும் அக்காலத்திலே காணப்பட்டன. பண்டைக்காலத்திலே பெண்களைப் பெற்றோர் சிறந்த வீரர்களுக்கே அவர்களை மணஞ் செய்து கொடுக்க விரும்பியதால் இத்தகைய விளையாட்டுக்கள் பிரபல்யம் பெற்றன.

இவை தவிர கொம்பு முறித்தல், சடுகுடு, தாச்சி மறித்தல் அல்லது கிளித்தட்டு, கிட்டிப்புள், வாரோட்டம், எல்லே என்னும் விளையாட்டுக்கள் எங்கள் தேசிய விளையாட்டுக்களாக மிளிர்கின்றன. இவை நமது நாட்டிலே தொன்று தொட்டு விளையாடப்பட்டு வந்தமையால் நாம் இவற்றைத் தேசிய விளையாட்டுக்கள் என்கிறோம். ஒரு நாட்டின் பாரம்பரியத்தையும், கலை, கலாசாரத்தையும் பிரதிபலிப்பனவே தேசிய விளையாட்டுக்கள்.

தேசிய விளையாட்டுக்கள் கிராமங்களிலே விசேடமாக இடம் பெறுகின்றன. நமது நாட்டின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள பிரதேசங்களில் உள்ள ஊர்களில் ஊர்முழுவதும் வடசேரி, தென்சேரி என்றோ, மேலைச்சேரி, கீழைச்சேரி என்றோ இரு சேரிகளாகப் பிரிந்து தேசிய விளையாட்டுப் போட்டிகளில் ஈடுபடுதலுமுண்டு. அண்மைக்காலத்தில் துலாமிதித்தல், கிடுகுபின்னுதல் போன்ற தொழிலை அடிப்படையாகக் கொண்ட போட்டிகளும் இடம் பெறுகின்றன.

கிரிக்கெட், ஹாக்கி, உதைபந்தாட்டம், கரப்பந்தாட்டம் போன்ற விளையாட்டுக்களின் வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கும் வகையில் தனித்தனி விளையாட்டுக்கழகங்கள் உண்டு. அதேபோன்று தேசிய விளையாட்டுக்களுக்கும் கழகங்களை உருவாக்கிச் செயற்பட வேண்டும். இதன் மூலம் நமது தேசிய விளையாட்டுக்கள் மேன்மேலும் வளர்ச்சியுறும்.

தேசிய விளையாட்டுக்களில் நாம் பங்குகொள்ளும் போது புதியதோர் உணர்வினைப் பெறுகிறோம். இவை நமக்கு உற்சாகமளிக்கும் பொழுது போக்காகவும் அமைகின்றன.

ஒழுங்கு, கட்டுப்பாடு, வெற்றி தோல்விகளைச் சமமாக மதிக்கும் மனப்பான்மை ஆதியாம் சிறந்த பண்புகளை நாம் விளையாட்டின் மூலம் பெறுகின்றோம். இவற்றை நன்குணர்ந்து மாணவர்களாகிய நாம் தேசிய விளையாட்டுக்களில் ஆர்வத்துடன் பங்கு கொள்ளுதல் வேண்டும். நமது தேசிய பாரம்பரியத்தைப் பிரதிபலிக்கும் தேசிய விளையாட்டுக்களின் வளர்ச்சிக்கு நம்மாலான பங்களிப்பினை வழங்குதல் வேண்டும். இதன் மூலம் நாட்டுக்குகந்த நற்பிரசைகளாக நம்மை உருவாக்கிக் கொள்ள முடியும்.

“ஓடி விளையாடு பாப்பா - நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா - ஒரு
குழந்தையை வையாதே பாப்பா”





46

## பாடசாலையில் எனது முதல் நாள் அனுபவம்

அப்பொழுது எனக்கு ஐந்து வயதிருக்கும் என்னைப் பெற்றோர்கள் பாடசாலைக்கு அனுப்ப விரும்பினார்கள். எனக்கும் ஒரே ஆசை. புத்தகப் பைதனைத் தோளில் போட்டு தண்ணீர்ப் போத்தலையும் மாட்டிக் கொண்டு சப்பாத்து, தொப்பி எல்லாம் அணிந்து பாடசாலைக்குப் படிக்கச் செல்ல வேண்டுமென்று விரும்பினேன்.

எல்லாப் பொருட்களும் அப்பா வாங்கித் தந்து விட்டார். எனக்குப் பாடசாலை செல்லும் நாள் எப்பொழுது வரும் என்றிருந்தது. அந்நாளும் வந்தது. எனக்கு ஒரே மகிழ்ச்சி. அன்று காலை என்னை அம்மா நீராட்டினார். புதுச்சட்டை அணிவித்தார். தலைவாரி ரிபன் கட்டினார். சப்பாத்து, தொப்பி எல்லாம் போட்டாகி விட்டது. நான் பாடசாலைக்குப் போகிறேன் என்று நினைக்கவே பெரும் ஆனந்தமாயிருந்தது.

அப்பா என்னை அழைத்தக் கொண்டு பாடசாலைக்கு வந்தார். நான் அப்பாவின் கைகளைப் பிடித்துக்கொண்டு துள்ளித்துள்ளி நடந்தேன். பாடசாலையும் வந்துவிட்டது. அங்கே சிறிய பெரிய மாணவர்கள் பலர் நின்றார்கள். அதிபரின் அலுவலகத்திற்கு அப்பா என்னை அழைத்துச் சென்றார். அதிபர் அலுவலகத்திற்குச் சென்றவுடனேயே என்னைப் பயம் பிடித்துக் கொண்டது. அதிபர் அவர்கள் என் கையைப் பிடித்து மெல்ல “உங்கள் பெயர் என்ன?” என்று கேட்டார். எனக்கு என் பெயரே மறந்துவிட்டது போலிருந்தது. அப்பாவிற்கு அருகில் போய் நின்று கொண்டேன்.

பின் அப்பாவும், அதிபரும் ஏதோ கதைத்தார்கள். பின் அப்பா என்னைப் பாலர் வகுப்பிற்கு அழைத்து வந்தார். எனக்குப் பயத்தினால் உடம்பே விறைத்துவிட்டாற் போலிருந்தது. பாலர் வகுப்பு ஆசிரியை என்னை அன்புடன் அழைத்து ஒரு ஆசனத்தில் அமரச் செய்தார். எல்லா மாணவர்களும் என்னையே பார்த்தார்கள். எனக்கு இன்னும் பயம்

அதிகரித்துவிட்டது. உடனே ஆசனத்தை விட்டெழுந்து நின்றுவிட்டேன். அப்பா என்னருகே வந்து இடத்திலே இருந்து நன்றாகப் படிக்க வேண்டுமென்று தட்டிக் கொடுத்தார். பின்பு வந்து கூட்டிச் செல்வதாகக் கூறிச் சென்றுவிட்டார்.

எனக்கு அழுகை வந்துவிட்டது. விக்கி விக்கி அழுதேன். அப்போது அந்த ஆசிரியை என்னைத் தன் அருகிலே அழைத்து அன்பாகக் கதைத்து என்னை அழாதிருக்கும்படி செய்தார். அதன் பின்னர் நான் அழாமல் இருந்து படித்தேன். என்றாலும் மனப்பயம் விட்டு நீங்கவில்லை. பின்பு பன்னிரண்டு மணியளவில் பாடசாலை விட்டது. அப்பாவுடன் வீடு வந்து சேர்ந்தேன். இன்றும் கூட அந்த முதல்நாள் அனுபவத்தை நினைக்க என் உள்ளம் மகிழ்ச்சியடைகிறது.



47

## வானவூர்தி

இக்காலத்தில் பயன்படும் போக்குவரத்துச் சாதனங்களில் வானவூர்தியும் ஒன்று. வானத்தில் பறந்து செல்வதால் இதனை வானவூர்தி என்று அழைப்பர். ஆகாயக்கப்பல், ஆகாயவிமானம் என்றும் இதனைக் கூறுவர். நிலத்திலும் நீரிலும் செல்லும் வன்மையுள்ள வானவூர்திகளும் உள்ளன.

வானவூர்தி மூலம் பல்லாயிரக்கணக்கான மைல் தூரத்தைச் சில மணித்தியாலங்களுள் கடந்து விடலாம். மக்கள் வானவூர்தி மூலம் பிரயாணம் செய்வதால் தங்கள் அருமையான நேரத்தை ஆதாயப் படுத்திக் கொள்கிறார்கள்.

'ரைட்' சகோதரர்கள் முதன் முதலில் வானவூர்தியை அமைத்தனர். பின்னர் படிப்படியாகப் பலவகையான வானவூர்திகள் அமைக்கப்பட்டன. வானவூர்தி பாரமற்ற இலேசான உலோகத் தகட்டினால் செய்யப்படுகின்றது. அதன் முற்பாகத்தில் இரண்டு உறுப்புக்கள் இருக்கின்றன. அவை அதிகம் வேகமாகச் சுழலக்கூடியன. வானவூர்தியின் நடுப்பாகம்



பருமனாகவும், முன்பாகம் சிறுத்தும், பின்பாகம் நீளமாகவும் இருக்கின்றது. அது உயரத்தில் பறந்து செல்லும் பொழுது ஒரு பறவையைப் போலத் தோன்றும். இதன் நடுப்பாகத்தில் பிரயாணிகள் இருப்பதற்கு வசதியான ஆசனங்கள் அமைக்கப்பட்டு இருக்கின்றன. விமானி இயந்திரத்தை இயக்கியதும் ஊர்தி மேலே எழுந்து படிப்படியாக உயர்ந்து செல்லும். பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் உள்ள நாடுகளுக்கெல்லாம் மக்கள் சில மணி நேரத்தில் இதில் பயணம் செய்கிறார்கள். வானவூர்திகள் அமெரிக்கா, ஐரோப்பிய தேசங்களில் உற்பத்தி செய்யப்படுகின்றன.



48

## பழந்துணியின் சுயசரிதை

நான் இப்போது ஒரு பழந்துணியாகக் குப்பை மேட்டிலே கிடக்கின்றேன். என்னைக் கவனிப்பார் யாருமில்லை. இனி என்ன! என் முடிவு காலம் கிட்டிவிட்டதென எண்ணுகிறேன். மழை பெய்து என்னை உக்க வைக்கிறது. வெய்யில் தகித்து உருக்குலைந்து வருகிறது. என் இதயம் துன்ப மிகுதியினாலே வெடித்து விடும்போலிருக்கிறது.

என் கவலைகளை, என் அனுபவங்களை உங்களுக்குச் சொல்ல வேண்டுமென்று ஆசைப்படுகிறேன். இதன் மூலமாகவாவது எனக்கு மனப்பாரம் குறையும். அதன் பின்பு நான் செத்து மடிந்து போகலாம். என் கதையை நீங்கள் கேட்க விரும்புகிறீர்களா? அப்படியானால் சரி. சொல்லுகிறேன் கேளுங்கள்

இந்தியாவில் கோயம்புத்தூர் என்னுமிடத்தில் பெரும் பருத்தி வயல் இருந்தது. அவ்வயலில் உள்ள ஒரு பருத்திச் செடியில் நான் தோன்றினேன். அப்போது என் நிறத்தைப் பார்த்தாலே கண் கூசும். பால் போன்ற வெண்மை நிறம். சிறிது காலத்தின் பின்பு என்னையும் என் நண்பர்களையும்

பறித்து கூலியாட்கள் பொதிகளாக்கினர். பின்னர் எம்மனைவரையும் இயந்திரசாலைக்கு அனுப்பினார்கள். எனக்கு ஒரே மகிழ்ச்சி.

இயந்திரசாலைக்கு வந்த சிறிது நேரத்தில் ஒருகதை பரவியது. எங்களை இயந்திரங்களினுட் செலுத்தி விதைகளினின்றும் வேறாக்கப் போகிறார்களாம். நான் நடுநடுங்கிப் போய்விட்டேன். என் சந்தோஷம் மறைந்தது. பின்பு எங்களை இயந்திரங்களுக்குட் செலுத்தினார்கள். சிறிது நேரத்தின் பின் விதைகளினின்றும் பிரிக்கப்பட்டு வெவ்வேறு வழியாக வெளியே வந்தோம். இவ்வாறு பெறப்பட்ட எங்களுக்கு "பஞ்சு" எனும் பெயர் வைக்கப்பட்டது. பின்பு பல இயந்திரங்களினூடாகச் செலுத்தப்பட்டுத் தூய்மையாக்கப்பட்டோம். பின்னர் எங்களை மூன்றங்குலக் கனமுள்ள பாய்களாக அழுத்தினார்கள். வேறு இயந்திரங்களின் உதவியுடன் எம்மை மெல்லிய இழைகளாக்கிச் சுருணைகளாக்கினர். இழைகளாக்கப்பட்ட எங்களைப் பெட்டிகளில் அடைத்து வேறு ஒரு இயந்திரசாலைக்கு அனுப்பினார்கள். அங்கே பல நிறச்சாயங்களில் ஊற வைத்தார்கள். பின்பு பல இயந்திரங்களின் உதவியுடன் துணிகளாக நெய்யப்பட்டோம்.

இதுவரை அனுபவித்த கஷ்டங்களுக்கெல்லாம் ஒரு விடிவு காலம் வந்ததென்று நினைத்தேன். என்னையும் எனது நண்பர்களையும் துணியின் வடிவிலே பார்க்கும்போது மிக அழகாக இருந்தது. எனக்கு என்னை நினைக்கும் போது மிகப் பெருமையாக இருந்தது. பின்பு துணிகளாக நெய்யப்பட்ட நானும் நண்பர்களில் சிலரும் பெரிய கப்பலில் ஏற்றப்பட்டோம். எங்களுக்கு மிகவும் சந்தோஷம். நண்பர்களுடன் பிரயாணம் செய்வதென்றால் கேட்கவும் வேண்டுமா? எங்களுக்கு எங்கே போகிறோம் என்று துறைமுகத்தில் இறங்கும் வரை தெரியாது. துறைமுகத்தில் இறங்கிய பிறகுதான் நாங்கள் இலங்கை வந்துள்ளோம் என்பது தெரிந்தது. எனது மனம் ஆனந்தக்களிப்பில் ஆடியது. இலங்கையைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை முன்பு இருந்தது. அது நிறைவேறுவதையிட்டு எனக்கு சந்தோஷம் எல்லை கடந்தது.



பின்பு நாங்கள் கடைகளுக்கனுப்பப்பட்டு அங்கு அலுமாரியில் வீற்றிருந்தோம். கடைக்கு வருபவர்கள் எல்லோரும் என்னையே பார்த்தார்கள். எனக்குப் பெருமை தாங்க முடியவில்லை. என்றாலும் அவர்களைப் பார்க்க எனக்குப் பிடிக்கவில்லை. திரும்பி உட்கார்ந்து விட்டேன். அந்நேரத்தில் ஒரு பெண்மணி அங்கு வந்தார். என்னைக் காட்டி ஏதோ கூறினார். விற்பனையாளனும் என்னை எடுத்துக் காட்டினான். அவர் என்னைத் தொட்டுப் பார்த்தார். பின் பணத்தைக் கொடுத்து என்னைப் பெற்றுக்கொண்டார்.

நண்பர்களைப் பிரிகின்றேன் என்ற கவலை இருந்தாலும் அந்தப் பெண்மணியின் வீட்டிற்குச் செல்கிறேன் என்று நினைக்கும் போது மகிழ்ச்சியாக இருந்தது. அங்கு அவரின் சின்ன மகளுக்கு நான் சட்டையாக ஆக்கப்பட்டேன். அந்தச் சின்ன மகளின் மேனியை அலங்கரிப்பதில் நான் சொல்லொணாப் பேரின்பம் அடைந்தேன். அவள் பிஞ்சுக் கைகள் என்னைத் தொடும்போது நான் என்னையே மறந்தேன். அவள் என்னை எந்நேரமும் ஆசையுடன் அணிவாள். பாடசாலைக்கு அணிந்து கொண்டு செல்வாள். மாலையில் கடற்கரைக்குப் பெற்றோருடன் செல்லும்போது அணிந்து கொள்வாள். எனக்குப் பெரிய மகிழ்ச்சி. ஆறு மாதகாலம் சந்தோஷமாக வாழ்ந்தேன். இவ்வாறு பலமுறை அணியப்பட்டு சலவை செய்யும் அவர்களது வேலைக்காரனால் கிழியுண்டேன். பின்னர் அவனாலே சிறிது காலத்தின் பின் விளக்குத் துடைக்கப் பயன்பட்டேன். அதன் பின்பு குப்பை மேட்டில் எறியப்பட்டேன். இன்று யாரும் கவனிப்பாரில்லாமல் வாடுகிறேன். உயர்ந்த நிலையில் இருக்கும் போது மாத்திரம் பெட்டியில் பூட்டி வைத்துப் பாதுகாப்பார்கள். நிலை கெட்டுவிட்டால் இப்படிக் கேவலப்படுத்துகிறார்கள். இனி என்ன? என் முடிவு நாளும் நெருங்கிவிட்டது. என் வாழ்வு வீழ்ந்து போனாலும் என் எசமானர் குடும்பம் சுகத்தோடு வாழ வேண்டும். அதுவே என் விருப்பம்.



49

# அன்னை தெரேசா

ஆதரவற்றவர்களின் அன்புத் தெய்வம், கருணையின் வடிவம், கர்த்தரின் அருட்கொடை என்றெல்லாம் போற்றப்படும் பெருமை மிக்கவர் அன்னை தெரேசா. ஐரோப்பாக் கண்டத்தில் அல்பேனியாவில் விவசாயக் குடும்பம் ஒன்றில் (27-08-1910) 1910 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 27 ஆம் நாள் பிறந்தார் அன்னை தெரேசா. அவ்வூர் அரசினர் பாடசாலையில் தமது ஆரம்பக் கல்வியைப் பெற்றார். குழந்தைகள், பெரியோர்கள், நோயாளிகள் போன்ற பலரோடும் இளமையிலேயே அன்பாகவும், மரியாதையாகவும் பழகி வந்தார்.

கிறித்தவ மதத்தில் ஆழ்ந்த பற்றும் உறுதியும் கொண்டவர் தெரேசா. இயேசு பெருமானைப் போன்று மக்களுக்குத் தாமும் தொண்டாற்ற வேண்டும் என்று விரும்பினார். மக்கள் சேவைக்காகவே தம்மை அர்ப்பணித்தார்.

1925 ஆம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்து அல்லல்படும் மக்களுக்குத் தொண்டாற்ற விரும்பினார். கிறித்தவ மத பொது நலச்சேவை என்னும் அமைப்பில் தன் இளமைப் பருவத்திலேயே அவர் சேர்ந்திருந்தார். இதனால் இந்தியா வந்து தொண்டாற்றுதற்கு அனுமதி தருமாறு அங்குள்ள தலைமைப் பாதிரியாரைக் கேட்டுக்கொண்டார். ஆனால் இவரது இளவயதைக் காரணம் காட்டி அனுமதி வழங்கப் பாதிரியார் மறுத்துவிட்டார்.

1928 ஆம் ஆண்டில் இவர் லோரேட்டா கன்னியர் மடத்தில் சேர்ந்தார். பின்னர் இந்தியாவுக்கு வந்து டார்ஜிலிங்கில் ஆசிரியர் பயிற்சி பெற்றார். ஆசிரிய பயிற்சியின் பின் கல்கத்தாவுக்கு வந்து அங்குள்ள கன்னியர் மடத்தில் நிரந்தர உறுப்பினராகச் சேர்ந்து கொண்டார்.

கல்கத்தா வீதிகளில் அம்மையார் கண்ட காட்சிகள் அவரது உள்ளத்தைப் பெரிதும் நெகிழச் செய்தன. பசிக்கொடுமையாலும் நோயாலும் மக்கள் வருந்துவதைக் கண்டு மனம் வருந்தினார். பஞ்சத்தால் வாடும் மக்களுக்கு உணவளிப்பதோடு, ஏழைக்குழந்தைகள் கல்விபெற வழி செய்ய



வேண்டுமென அவரது கருணையுள்ளம் விரும்பியது. ஆனால் கன்னிகா மடத்து விதிகள் அவற்றினை மேற்கொள்ள இடமளிக்கவில்லை. இது குறித்து ரோமாபுரியில் உள்ள தலைமை மதகுருவுக்குப் பலமுறை எழுதினார். அவரது விடாமுயற்சி பயனளித்தது. 1948 ஆம் ஆண்டு ரோமாபுரியிலிருந்து அனுமதி கிடைத்ததும் அன்னை மிக்க மகிழ்ச்சி கொண்டார். கன்னியர் மடத்து உடைகளைக் களைந்து விட்டு வங்காளப் பெண்கள் போல உடையணிந்து கொண்டார். சாதாரண சேலையினையே தெரிந்து எடுத்துக் கொண்டார். நீலக்கரையுடன் கூடிய வெள்ளைப் புடைவையை உடுத்தி, வெள்ளை முழுக்கைச் சட்டையைப் போட்டுக் கொண்டார். இடது தோளில் உலோகத்தினாலான சிலுவைச் சின்னம் தொங்க, காலுக்குச் சாதாரண செருப்பு அணிந்து கொண்டார்.

சேரியின் மத்தியிலே ஒரு குடிசையை வாடகைக்கு எடுத்துக் கொண்டார். சேரியைத் துப்புரவு செய்யும் பணியிலீடுபட்டார். சேரிவாழ் மக்கள் அன்னையுடன் அன்புடனும். மரியாதையுடனும் பழகினர். அவரது பணிகளுக்கு ஒத்துழைப்பு வழங்கினர். சேரியில் உள்ள சிறுவர்களுக்குக் கல்வி புகட்ட முற்பட்டார். பள்ளிக்கூடம் ஒன்றை அங்கு ஆரம்பித்துப் பாடம் சொல்லிக் கொடுத்தார். சிறுவர்களுக்கு உணவும் உடையும் கொடுத்துதவினார்.

1950 ஆம் ஆண்டு "அன்பின் தூதுவர்கள்" என்று பொருள்படும் இயக்கமொன்றை ஆரம்பித்தார். இவ்வியக்கம் மக்கள் ஆதரவுடன் வளரத் தொடங்கியது. சாதி, மத வேறுபாடு எதுவுமின்றி இவ்வியக்கத்தில் பலர் உறுப்பினர்களாகச் சேர்ந்தனர். பாடசாலைகள் அமைத்தல், மருத்துவ வசதியில்லாத இடங்களில் மருத்துவமனைகள் அமைத்தல், குழந்தைகள் காப்பகங்கள், அநாதை இல்லங்கள் அமைத்தல் ஆதியாம் பணிகளை இவ்வியக்கம் நோக்கமாகக் கொண்டு செயற்பட்டது.

அநாதைக் குழந்தைகளை ஆதரித்து வளர்க்கும் பொருட்டு "நிர்மல் கென்னடி இல்லம்" என்ற இல்லத்தை நிறுவினார். தொழு நோயாளிகளுக்காகத் தொழுநோயாளர் இல்லத்தைத் தொடங்கினார். சாவின் விளிம்பில் தவிக்கும் அநாதைகளுக்கு உதவும் பொருட்டுத் தருமசாலையை ஏற்படுத்தினார். இந்த இல்லங்களை நடத்துவதற்காக அன்னை

தாமே வீதிகளில் இறங்கி நிதி திரட்டினார். அவரது வாழ்வில் நிகழ்ந்த மறக்கமுடியாத நிகழ்ச்சிகள் பலவுள.

40 ஆண்டுகளின் முன் ஒரு நாள்! கல்கத்தாவின் அழுக்குத் தெருக்களில் ஒன்றின் ஓரத்தில் அன்னை நின்றுகொண்டிருந்தார். அவர் தொடங்கிய நிறுவனத்துக்கு நன்கொடைக்காகக் கை ஏந்தி நிற்கிறார். கல்கத்தாவின் பெண் துப்புரவுத் தொழிலாளர்களது சீருடையில் நிற்கும் அன்னையை அருவருப்போடு பார்க்கிறான் நகை வியாபாரி ஒருவன். "ஐயா! அநாதைக் குழந்தைகளுக்கு ஏதாவது கொடுத்து உதவுங்கள்" ஏந்திய கரங்கள் அவன் முன்பு நீள்கின்றன. தம்முன் நீண்ட உள்ளங்கைகளில் காறி உமிழ்கிறான் அவன். அன்னையின் முகத்தில் புன்னகை மாறவேயில்லை. "ஐயா! இப்போது நீங்கள் கொடுத்ததை நான் எடுத்துக் கொள்கிறேன். ஆனால் குழந்தைகளுக்கு ஏதாவது நிதி உதவி செய்யுங்கள்." என்கிறார் அன்னை. அதிர்ச்சியில் அவன் தலைகுனிந்து கொள்கிறான்.

இதற்கு நேர் மாறான மற்றோர் காட்சி அன்னையின் வாழ்வில் 1960 இல் நிகழ்ந்தது. அப்போத அமெரிக்க நாட்டின் செனட்டர்களில் ஒருவரன றொபேட் கென்னடி அன்னையைக் காண அவரது ஆச்சிரமத்துக்கு வந்தார். அந்த நேரத்தில் அன்னை தொழு நோயாளர் பிரிவில் துணி துவைத்துக் கொண்டிருக்கிறார். அன்னை வருவதற்குக் காத்திராமலே நேரே அவர் பணி செய்துகொண்டிருக்கும் இடத்திற்கே செல்கிறார். துணி துவைத்துக் கொண்டிருந்த அன்னையிடம் கை குலுக்கும் பொருட்டுக் கையை நீட்டுகிறார் கென்னடி. பதிலுக்குத் தன் கைகளை நீட்டாமல் "என் கைகள் அழுக்காக இருக்கின்றன" என்கிறார் அன்னை. "அன்னையே சேவையால் அழுக்கடைந்துள்ள இந்தக் கரங்களைத் தொட விரும்புகிறேன். அதை எனது பேறாகக் கருதுகிறேன்." என்றார் கென்னடி.

அன்னையின் புகழ் உலகெல்லாம் பரவிய நிலையிலும் அவர் நிலை மாறவேயில்லை. வறுமையை விரும்பி வரித்த அன்னையாகவே அவர் விளங்கினார். தன் ஆடை கிழிந்தால் தானே அதைத் தைத்து உடுத்தார். மக்கள் சேவையே மகேசன் சேவையெனக் கருதினார். "சேவைக்கு இறைவன் என்னைப் பணித்துள்ளான். அவன் தன் காரியங்களை என் மூலம் நடத்திக்கொள்கிறான்" என்று அன்னை அடிக்கடி கூறிக் கொள்வார்.



அன்னையின் அரும்பணிகளை உலகம் போற்றிய வேளையில் அவரை நாடிப் பல பரிசுகள் தேடிவந்தன. பாப்பரசர் விலையுயர்ந்த காரொன்றைப் பரிசாக வழங்கினார். இம்பீரியல் இரசாயனத் தொழில் நிறுவனம் இவருக்கு 13 இலட்சம் பெறுமதியான சொத்தைக் கொடுத்துதவியது.

1977ஆம் ஆண்டில் அன்னைக்கு நோபல் பரிசு கிடைத்தது. 1979 ஆம் ஆண்டில் மூன்று இலட்சம் டாலர் பெறுதியான "பாலசான் சர்வதேச விருது" வழங்கப்பட்டது. அன்னையின் பணிகளைப் பாராட்டிக் கௌரவிக்கும் வகையில் இந்திய அரசு "பாரத ரத்னா" என்னும் அதியுயர் விருதினை வழங்கியது. தபால் தலைகளையும் வெளியிட்டுக் கௌரவித்தது.

அனைத்து உயிர்களிடத்தும் அன்பையும் நம்பிக்கையையும் துளிர்க்கச் செய்த அன்னை தெரேசா தமது 87 ஆம் வயதில் 1997 ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் 5 ஆம் திகதி காலமானார். கருணை பொழியும் அத்திருவடிவம் மறைந்து விட்டது. அன்னாரின் திருநாமம் அனைத்துலகிலும் என்றும் நின்று நிலவுமென்பது திண்ணம்.






## பாட்டி சொன்ன கதை

எங்கள் பாட்டி கதை சொல்வதில் வல்லவர். நாங்கள் இரவு உணவு உண்டபின் அவரைக் கதை சொல்லுமாறு கேட்போம். அவர் அறிவு மிகுந்த கதைகளை எனக்கும் எனது தம்பி, தங்கைக்கும் சொல்லி வருவார். ஒருநாள் அவர் எங்களுக்குக் கூறிய கதை இது:-

ஓர் ஊரிலே ஒரு விவசாயி சிறிய வெள்ளரித் தோட்டம் ஒன்றை உண்டாக்கியிருந்தான். அதனை அவன் கண்ணும் கருத்துமாய்ப் பேணிவந்தான். சிறிது நாட்களில் வெள்ளரிக் கொடிகள் எல்லாம் நன்றாகப் பூத்துக் குலுங்கின. பிஞ்சுகள் வெளிவரத் தொடங்கின. இதனைக் கண்ட விவசாயி மிகவும் மகிழ்வடைந்தான்.

விவசாயியைப் போலவே பக்கத்து மரக்கிளையில் இருந்த காகம் ஒன்றும் இந்த வெள்ளரிப் பிஞ்சுகளைக் கண்டு மிகவும் களிப்படைந்தது. இன்னும் பல நாட்களுக்கு நான் உணவுதேடி ஊரெல்லாம் அலைய வேண்டியதில்லை. இந்த வெயில் காலத்தில் கஷ்டப்படாமல் வெள்ளரிக் காய்களைச் சாப்பிட்டு நிம்மதியாக இருக்கலாம் என்று மனதில் எண்ணிக் கொண்டது. அதன்படி தினமும் வெள்ளரிப் பிஞ்சுகளைச் சாப்பிடுவதை விட மிக அதிகமான பிஞ்சுகளைச் சேதப்படுத்தியது.

தினமும் வெள்ளரிப் பிஞ்சுகள் நாசமாக்கப்படுவதைக் கண்ட விவசாயி பெரும் கவலை கொண்டான். காகத்தைப் பிடிக்கப் பலமுறை முயன்றும் அந்தப் பொல்லாக் காகம் தப்பித்துக் கொண்டே வந்தது. கடைசியாகக் கறுப்பு நூலால் செய்த சுருக்குக் கண்ணிகளைப் பல இடங்களிலும் வைத்துச் சென்றுவிட்டான். அதிகாலையிலே அந்தக் காகம் வந்து வெள்ளரிப் பிஞ்சுகளைச் சாப்பிட ஆரம்பித்தது. சடுதியாக இரண்டு கால்களும் நூலில் மாட்டிக் கொண்டன. காகத்தினால் பறக்க முடியாமற் போய்விட்டது. சிறிது நேரத்தில் விவசாயி தன் தோட்டத்தைப் பார்க்க வந்தான். அவன் வருவதைக் கண்ட காகம் தன் ஆயுள் இன்றோடு முடிந்து விடுமோ என்று அஞ்சியது. கடைசியாக ஒரு தந்திரம் செய்து பார்ப்போமென எண்ணி இறந்த மாதிரிக் கிடந்தது. கண்ணியிற் சிக்கிய காகத்தை விவசாயி அருகில்சென்று பார்த்தான்.

காகம் இறந்து கிடந்ததைக் கண்டு அதன் கால்களில் உள்ள நூல்களை வெட்டிக் கையிலெடுத்து இன்றோடு ஒழிந்தாய் என்று மகிழ்வோடு அருகில் உள்ள வாய்க்காலுக்குள் எறிந்தான். இதுதான் சமயம் என்பதறிந்த காகம் கீழே விழுமுன் திடீரெனப் பறந்து மரக்கிளையில் உட்கார்ந்தது. விவசாயியைப் பார்த்து கா....கா கா....கா என்று பலமுறை கிண்டலாகக் கரைந்தது. காகத்தால் ஏமாற்றப்பட்டு விட்டேனே என்று அவன் வெட்கமும் துக்கமும் அடைந்தான்.





51

## மகாகவி பாரதியார்

தமிழ் இலக்கிய வானில் சுடர் விட்டொளிரும் விண்மீன் பாரதியார். அவர் மகாகவி, புரட்சிக்கவிஞர். பழமைக்கும் புதுமைக்கும் பாலம் அமைத்த ஒப்பற்ற மகாகவி.

எட்டயபுரத்தில் சின்னச்சாமி ஐயருக்கும் இலட்சுமி அம்மாளுக்கும் மகனாக 1882 ஆம் ஆண்டில் பிறந்தவர். தன் பாட்டுத் திறத்தாலே இவ்வையகத்தைப் பாலித்திட விரும்பியவர். இந்திய நாட்டின் விடுதலைக்காகத் தம் பாடல்கள் மூலம் உரமூட்டியவர். புரட்சிகரமான கருத்துக்களைப் பாடல்களில் புகுத்தியவர்.

"தமிழகம் தமிழுக்குத் தகும் உயர்வளிக்கும் தலைவனை எண்ணித் தவம் கிடக்கையில் இலகு பாரதிப் புலவன் தோன்றினான்" என்றொரு கவிஞர் பாரதியினைக் குறிப்பிடுகிறார். அடிமைத்தன எதிர்ப்பு, வீரம், தமிழ்ப்பற்று, பெண் உரிமை உணர்வு, தொழில் வளர்ச்சி, தேசிய உணர்வு என்பன எல்லாம் பாரதியாரின் கவிதைகளில் பளிச்சிடுகின்றன. சமூகக் கொடுமைகளையும் மூடப் பழக்க வழக்கங்களையும் கண்டித்துக் கவிதை பாடிய பாரதி கண்ணன் பாட்டு, குயிற்பாட்டு, பாஞ்சாலி சபதம் போன்ற ஒப்பற்ற, காலத்தால் அழியாத கவிதைகளையும் தந்துள்ளார். இவரது தேசியப் பாடல்கள் கோழைகளையும் வீரம் கொள்ளச் செய்யும் சக்தி மிக்கவை. பாரதியின் தேசியப்பாடல்களில் உளம் நெகிழ்ந்த நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம்பிள்ளை அவர்கள்.

"படித்தறியா மிக ஏழைக் கிழவனேனும்
பாரதியின் பாட்டிசைக்கக் கேட்பா னாகில்
துடித்தெழுந்து தன்மெலிந்த தோளைக் கொட்டித்
துளைமிகுந்த கந்தலுடை சுருக்கிக் கட்டி
எடுத்தெறிய வேணுமிந்த அடிமை வாழ்வை
இப்பொழுதே இக்கணமே என்றென் றார்த்திங்கு
அடித்துரைத்தே ஆவேசம் கொள்வா னென்றால்
அப்பாட்டின் பெருமைசொல யாரே வல்லார்"

என்று ஆவேச உணர்வுடன் பாடுகின்றார். பாரத நாட்டில் சுதந்திரக் கனலை வீறு கொண்டெழச்செய்யும் சக்தி பாரதியின் பாடல்களுக்கேயுண்டு என்பதை நாமக்கல் கவிஞரின் கவிதை நன்குணர்த்துகிறது.

மழலைகள் விரும்பும் கனிவொடு கூடிய கவிதை பல படைத்த கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை அவர்கள் பாரதி குறித்துப் பாடிய பாடல் ஒன்று.

"பாட்டுக் கொருபுலவன் பாரதி அடா - அவன்
பாட்டைப் பண்ணோ டொருவன் பாடினான் அடா
கேட்டுக் கிறுகிறுத்துப் போனேன் அடா - அந்தக்
கிறுக்கில் உளறுமொழி பொறுப்பாய் அடா"

என்று தொடங்குகிறது.

பாரதியாரை நேரில் அறிந்து, உணர்ந்து அவர் கவிதைகளிலே ஊறித் திளைத்த பாவேந்தர் பாரதிதாசன் பாரதி பற்றிக் குறிப்பிடும் போது;

பைந்தமிழ்த் தேர்ப்பாகன்! அவன் ஒரு
செந்தமிழ்த்தேனீ! சிந்துக்குத் தந்தை!
குவிக்கும் கவிதைக்குயில்! இந்நாட்டினைக்
கவிக்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு!
நீடுதுயில் நீங்கப் பாடிவந்த நிலா!
காடு கமழும் கற்பூரச் சொற்கோ!
கற்பனை ஊற்றாம் கதையின் புதையல்!
திறம்பாட வந்த மறவன் புதிய
அறம் பாட வந்த அறிஞன்!"

என்று போற்றுகின்றார்.

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞரான பாரதியார் பண்டைய மரபைப் பேணியதோடு, மரபை மறுத்து தெம்மாங்கு, பள்ளு, சிந்து, கண்ணி முதலிய நாட்டுப்புறப்பாடல் அமைப்பிலும் கவிதை பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது. இதனாற்றான் பாரதியைப் புதுமைக் கவிஞர் என்று புதுக்கவிஞர்கள் போற்றுகிறார்கள். எளிய, இலகுவான சொற்களைப் பயன்படுத்தி பாச் செய்த பாரதி அநேக கட்டுரைகளையும் எழுதியுள்ளார். சின்னச்சின்ன வசனங்கள்,



உயிர்த்துடிப்புள்ள சொற்கள், கற்பனைத்திறன் அனைத்தையும் அவரது கட்டுரைகளில் காணலாம்.

பாரத நாட்டின் பழமையிலும், பெருமையிலும் ஈடுபாடு கொண்டிருந்த பாரதியார் வளரும் அறிவியல் புதுமைகளிலும் நாட்டம் கொண்டிருந்தார். இதனையே,

"வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம் - அடி
மேலைக் கடல் முழுதும் கப்பல் விடுவோம்"

என்னும் வரிகள் அடையாளம் காட்டுகின்றன. பாரதியின் கவிதைகள் ஒவ்வொன்றும் சொற்சித்திரங்கள். அவை காலம் கடந்து வாழும் பெருமைக்குரியன.

"ஒரு மழை மாதத்தில் எட்டயபுரத்தின் இளைத்த தெருவொன்றில் பிறந்த அந்தப் பிஞ்சு சூரியன்" 1921 இல் செப்டெம்பர் மாதம் 11 ஆம் நாளில் இவ்வுலகை விட்டு மறைந்தது. ஆம், மகாகவி பாரதி மறைந்தாலும் அவரது கவிதைகள் மறையாது ஒளிபரப்பிக் கொண்டே இருக்கின்றன. அவரது அடிச்சுவட்டில் காலந்தோறும் புதுப்புது கவிஞர்கள் தோன்றிக் கொண்டேயிருப்பர்.





52

## நான் கண்டெடுத்த பணப்பை

அன்று புதன்கிழமை. மதிய நேரம் எனது பாடசாலை மாணவர்கள் அனைவரும் விளையாட்டு மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்தனர். நான் எனது வகுப்புத் தோழர்களுடன் 'கிரிக்கெட்' விளையாடிக் கொண்டிருந்தேன். அருணன் அடித்த பந்து பாடசாலை வேலியோடு போய் விழுந்தது. அதனை எடுப்பதற்காக விரைந்து ஓடினேன். அப்போது எனது காலில் ஏதோ தட்டுப்படவே குனிந்து பார்த்தேன். அது ஓர் பணப்பை. அதனை எடுத்துக் கொண்டு மீண்டும் ஓடினேன். பந்தை எடுத்து வேகமாக வீசி எறிந்தேன். பணப்பையைப் பத்திரமாக எனது காற்சட்டைப் பையினுள்

வைத்துக் கொண்டேன்.

சிறிது நேரத்தில் பாடசாலை மணி ஒலித்தது. மாணவர்கள் எல்லோரும் வகுப்பறைகளுக்குத் திரும்பினர். யான் கண்டெடுத்த பணப்பையைத் திறந்து பார்த்தேன். அதற்குள் இருநூறு ரூபா பணம் இருந்தது. உடனே எனக்கு அடிக்கடி என் பெற்றோர் கூறும் அறிவுரை ஞாபகத்திற்கு வந்தது. "வழியில் ஒரு பொருளைக் கண்டெடுத்தால் அதனை மறைக்கக் கூடாது. உரியவர்களைத் தேடிக் கொடுத்து உதவ வேண்டும்" என்று என் பெற்றோர் சொல்லித் தந்துள்ளனர். அதன்படி யான் கண்டெடுத்த பணப்பையைக் கொண்டு சென்று அதிபரிடம் ஒப்படைத்தேன். அவர் அதனைப் பார்த்துவிட்டு என்னைப் பெரிதும் பாராட்டினர்.

அப்போது பணப்பையைத் தொலைத்த மாணவன் ஒருவன் அதிபரது அலுவலகத்துக்கு வந்தான். அவன் எட்டாம் வகுப்பில் படிக்கும் கண்ணன். தனது பணப்பையைத் தொலைத்து விட்டதாகவும், எங்கும் தேடியும் கிடைக்கவில்லை என்றும் அதிபரிடம் முறையிட்டான். அதிபரின் கையிலிருந்த பணப்பையைக் கண்டதும் அவன் அளவில்லா மகிழ்ச்சி அடைந்தான். அது தன்னுடைய பணப்பை என்றும், தந்துதவுமாறும் அதிபரைக் கேட்டான்.

அதிபர் என்னைத் திரும்பிப் பார்த்தார். "இதோ நிற்கும் உதயன் தான் இப் பணப்பையைக் கண்டெடுத்து என்னிடம் தந்துள்ளார். இவனது உண்மையுணர்வை, நேர்மைத் திறனைப் பெரிதும் மெச்சுகிறேன்." என்று கூறினார். உடனே அந்த மாணவன் என்னைப் பாசத்துடன் பார்த்து நன்றி கூறினான். அதிபர் என்னைப் பாராட்டியமை எனக்குப் பெருமகிழ்வை அளித்தது. நான் அந்தப் பெருமிதத்துடன் வகுப்பறைக்குத் திரும்பினேன். மறுநாள் பாடசாலையில் நடைபெற்ற காலைக் கூட்டத்தின் போது அதிபர் இச்சம்பவத்தைக் குறிப்பிட்டுப் பேசியதுடன் என்னை மேடைக்கு அழைத்துப் பேனை ஒன்றையும் அன்பளிப்பாக வழங்கினார்.

"உண்மை உயர்வு தரும்" என்பதை இச்சம்பவம் எனக்கு என்றும் நினைவூட்டிய வண்ணமேயுள்ளது.





53

## பத்து ரூபாய்த் தாள் ஒன்றின் சுயசரிதை

நான் இன்று வங்கியில் ஆயிரம் ரூபாக் கட்டுக்குள் அடங்கிக் கிடக்கிறேன். நான் இங்கு வருமுன்னர் பலதரப்பட்ட மனிதர்களிடம் பல்வேறு அனுபவங்களைப் பெற்றிருக்கிறேன். நான் முதன் முதலில் இங்கிலாந்து தேசத்தில் பிறந்தேன். எனது உடலில் இலங்கையில் உள்ள அழகிய குருவிகளின் வனப்பை வரைந்திருந்தனர். சிலர் என்னை எப்போதும் தங்களுடன் வைத்துக் கொள்ள ஆசைப்பட்டனர்.

இலங்கை மத்திய வங்கியில் நான் வந்திருக்கும் போது இளமை எழில் பிரகாசிக்கக் காண்பவர் கண்ணைக் கவரும் வகையில் அழகும் இளமையும் கொண்டு விளங்கினேன்.

ஒருநாள் மத்திய வங்கியிலிருந்து வேறொரு வங்கிக்கு எனது சகோதரர் பலருடன் பயணம் செய்தேன். வங்கி அதிகாரி எங்களை ஒரு பெட்டிக்குள் அடைத்து எடுத்துக் கொண்டு வெளியே வந்தார். நாங்கள் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தோம். மோட்டார்க் கார் ஒன்றில் எங்களை வைத்துக் கொண்டு சென்றனர். பொலீஸ் பாதுகாப்புடன் நாங்கள் அக்காரில் சென்றோம். மலைநாட்டில் உள்ள வங்கி ஒன்றினுள் எங்களைக் கொண்டு சென்று வைத்தனர். மீண்டும் நாங்கள் பாதுகாப்புடன் இரும்புப் பெட்டி ஒன்றினுள் வைத்துப் பூட்டப்பட்டோம்.

சிலநாட்கள் எனது சகோதரர்களுடன் அடங்கிக் கிடந்தேன். ஒரு நாள் தேயிலைத் தோட்டச் சொந்தக்காரர் ஒருவர் வங்கிக்கு வந்தார். தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குச் சம்பளம் வழங்குவதற்காக எங்களை அவர் வாங்கிச் சென்றார். மோட்டார்க் காரில் மீண்டும் பயணம் செய்தோம். தோட்டத்துரையின் அலுவலகத்திற்குச் சென்றோம். அங்கு தொழிலாளர்கள் பலர் வரிசையாக வந்து கையெழுத்துப் போட்டுச் சம்பளத்தைப் பெற்றுச் சென்றனர். இராமுவின் முறை வந்தபோது துரை அவர்கள் என்னையும் சில சகோதரர்களையும் அவனிடம் கொடுத்தார். அவன் எங்களை வாங்கி மடித்துத் தனது மடியில் வைத்துக் கொண்டான். பின்னர் உற்சாகத்துடன் வீட்டுக்குச் சென்று தனது

மனைவியிடம் எங்களைக் கொடுத்தான். அவனது மனைவி ஒவ்வொருவராக எடுத்துப் பார்த்தாள். சந்தோஷப் பட்டாள். என்னைத் தன்னுடன் வைத்துக் கொண்டாள். ஏனையவற்றை இராமு வாங்கிக் கொண்டான். இராமுவின் மனைவி என்னை ஒவ்வொரு நாளும் காலையில் எடுத்துப் பார்ப்பாள். "அழகான ரூபா நோட்டு" என்று கூறுவாள். தனது சேலைத் தலைப்பில் முடிந்து வைத்துக் கொள்வாள்.

ஒருநாள் இராமுவின் மகன் கண்ணன் பாடசாலைக்குச் செல்வதற்குப் பணம் கேட்டான். இராமுவின் மனைவி என்னை அவனிடம் கொடுத்தாள். அப்போது நான் நன்கு கசங்கியிருந்தேன். கண்ணன் என்னை ஒரு சில்லறைக் கடையில் கொடுத்து மாற்றிப்பணம் பெற்றான். அந்தக் கடைக்காரன் நல்ல புத்திசாலி. அவன் என்னைக்கொண்டு சென்று தான் வைத்திருந்த ஏனைய பத்துரூபாய்த் தாள்களுடன் என்னையும் சேர்த்து எண்ணினான். அப்போது பத்தாயிரம் ரூபா இருந்தது. எங்களால் சிறந்த பயனைப் பெற அவன் விரும்பினான். அவன் என்னையும் எனது சகோதரர்களையும் கொண்டு சென்று தேசிய சேமிப்பு வங்கியில் தனது பெயரில் இருப்புப் பணமாக வைத்தான். இங்கே எங்களுக்கு நிறையப் பாதுகாப்பு உண்டு. அதுவுமல்லாமல் எங்களை வங்கியிலிட்டவருக்கு வட்டியாகப் பணமும் கிடைக்கிறது. எனது மதிப்பும் குறையவில்லை. நான் ஆயிரம் ரூபா கட்டுக்குள் மீண்டும் அடங்கிக்கிடக்கிறேன்.





# உழைப்பே உயர்வு

மகிழூர் என்பது ஒரு சிறு கிராமம். இக்கிராமத்தில் வதிவோர் பெரும்பாலும் விவசாயிகள். நெற்றி வியர்வை நிலத்திற் சிந்தப் பாடுபட்டுழைக்கும் பண்புடையவர்கள். நேசனும் உதயனும் இக்கிராமத்தைச் சேர்ந்தவர்கள். நெருங்கிய நண்பர்கள். ஒரே பாடசாலையில் பயின்றவர்கள். க. பொ. த சாதாரண வகுப்பில் படித்துச் சித்தி பெற்றவர்கள். இருவராலும் அதற்கு மேல் படிப்பைத் தொடர முடியவில்லை.



நேசன் உத்தியோகம் தேடிக் கொழும்பு சென்றான். உதயன் வயது முதிர்ந்த தன் தாயைக் காப்பாற்ற வேண்டிய நிலையில் இருந்தான். அதனால் அவன் பிறவூருக்குச் செல்ல விரும்பவில்லை. சொந்த ஊரில் இருந்து கொண்டே பாடுபட்டு உழைத்துத் தன் தாயைக் காப்பாற்ற விரும்பினான். வேறு எவ்வித வசதியும் அவனுக்கிருக்கவில்லை. சிறய ஓலைக் குடிசை ஒன்றிலேயே அவர்கள் வாழ்ந்து வந்தனர். எந்நாளும் தன் குடும்பநிலை பற்றியே அவன் சிந்திப்பான். எவ்வாறு உழைத்து முன்னேறலாம் என்று யோசிப்பான்.

ஒருநாள் காலைவேளை, உதயன் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து கொண்டு எப்படி முன்னேறலாம் என்று சிந்தித்துக் கொண்டிருந்தான். அவ்வேளையில் அவனது வீட்டின் அயலில் உள்ள ஒழுங்கையில் மாட்டுவண்டியொன்று வந்து கொண்டிருந்தது. வண்டியில் அநேக நெல் மூடைகள் அடுக்கப்பட்டிருந்தன. வண்டியின் பாரம் காரணமாக மணல் ஒழுங்கையில் எருதுகள் அவ்வண்டியை இழுக்கமுடியாமல் திண்டாடின. வண்டிச்சாரதி எருதுகளைத் தூண்டிய வண்ணமிருந்தான். எருதுகள் கால்களை மடக்கி மிண்டி இழுத்தன. வண்டி நகரவில்லை. எருதுகள் சோர்வுறாது மீண்டும் மீண்டும் மிண்டி இழுத்தன. அவற்றின் முயற்சி பலித்தது. வண்டி நகர்ந்து சென்றது.

இக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த உதயனுக்கு ஓர் எண்ணம் உதயமாயிற்று. மீண்டும் மீண்டும் முயற்சித்தால் எடுத்த காரியம் வெற்றி தரும் என்பதை உணர்ந்து கொண்டான். தானும் சோம்பியிராமல் விவசாயத்தில் ஈடுபட்டால் பயன் கிட்டுமெனக் கருதினான். வீட்டு வளவில் பண்படுத்தப்படாது கிடந்த நிலத்தைக் கொத்திப் பண்படுத்தினான். குப்பை கூளங்களைப் பசளையாகப் புதைத்தான். பாத்திகள் ஆக்கினான். தனக்குத் தெரிந்த ஆசிரியர் ஒருவரிடம் பணம் கடனாகப் பெற்று மரவள்ளித் தடிகளை வாங்கினான். அவற்றைத் துண்டங்களாக்கிப் பண்படுத்திய பாத்திகளில் நாட்டினான். ஒழுங்காக நீர் இறைத்து அவற்றை நன்கு வளரச் செய்தான். அவை நன்கு செழித்து வளர்ந்தன. மூன்று மாதங்களில் மரவள்ளிக்கிழங்கு பிடுங்கக் கூடிய நிலையை அடைந்தன. உதயனின் கடின உழைப்பு பயனளித்தது. பெருந்தொகையான

கிழங்குகளைச் சந்தைக்கும் கொண்டு சென்று விற்றான். எதிர்பார்த்ததிலும் அதிக பணம் கிடைத்தது.

அவனது விடாமுயற்சியைப் பார்த்த ஆசிரியர் அன்பரசன் தனது தோட்டத்தை உதயனுக்குக் குத்தகைக்குக் கொடுத்தார். அத்தோட்டத்தில் மிளகாய், கத்தரி, பாகல் பயிரிட்டான் உதயன். வாரந்தோறும் பெருமளவு வருமானம் கிடைத்தது. தோட்டச் செய்கையில் உதயன் தொடர்ந்து ஈடுபட்டான். சிறந்த தோட்டக்காரன் என்ற பெயரையும் பெற்றான். இரண்டு வருடங்களில் அவன் கல்வீட்டுக்காரனாகவும் மாறி விட்டான்.

கொழும்பு சென்ற நேசன் இரண்டு ஆண்டுகளின் பின் தன் சொந்தக் கிராமத்துக்குத் திரும்பினான். உதயனைச் சந்தித்தான். அவனது முன்னேற்றம் கண்டு பெரும் ஆச்சரியமுற்றான். "கொழும்பில் வேலை தேடி அலைந்தேன். எனக்கேற்ற தொழில் எதுவும் நிலையாகக் கிடைக்கவில்லை. கடைகள் தோறும் படியேறி அலுத்துவிட்டேன். எனக்கு வாழ்க்கையே வெறுத்து விட்டது" என்று கண்ணீர் விட்டு அழுதான்.

நேசனின் நிலை கண்டு உதயன் பெரிதும் வருந்தினான். "கவலைப்படாதே நேசன். நமக்கு உறுதியான உடல் உண்டு. கைகளில் பலமுண்டு. நாம் வேலை தேடி வேற்றூர் சென்று அலைய வேண்டியதில்லை. பிறரிடம் அடிமையாக வேலை செய்வதை விடச் சுதந்திரமாகத் தன்னம்பிக்கையுடன் சுயமாக உழைத்து வாழமுடியும். என்னைப்போல் தோட்ட வேலையில் ஈடுபடு. இரண்டு வருடங்களில் பெரும்செல்வந்தனாகி விடுவாய் உனக்குத் தான் தோட்ட நிலமிருக்கிறதே. பின்னர் ஏன் கவலை? இன்று முதல் தோட்ட வேலையில் ஈடுபடு. என்னாலான உதவியனைத்தையும் செய்வேன்." என்றான் உதயன்.

உதயன் கூறிய அறிவுரையினை நேசன் முழுமனதுடன் ஏற்றுக் கொண்டான். தோட்ட வேலையில் முழு மூச்சுடன் ஈடுபட்டான். கடுமையாக உழைத்தான். கவலை நீங்கியது. செல்வம் சேர்ந்தது.

உழைப்பே உயர்வு தரும் என்பதை நேசனும் உதயனும் நிலை நாட்டி விட்டனர்.





55

## பாழடைந்த கிணறு ஒன்றின் சுயசரிதை

அன்று சனிக்கிழமை. பாடசாலை விடுமுறை. காலை வேளையில் எனது நண்பன் உதயனைச் சந்திப்பதற்காக அவனது வீடு நோக்கிப் புறப்பட்டேன். உதயனின் வீடு எனது வீட்டிலிருந்து அரை மைல் தூரத்தில் உள்ளது. வயல் வெளிகளைக் கடந்து செல்ல வேண்டும். செல்லும் வழியில் பாழடைந்த கிணறு ஒன்றைக் கண்டேன். மேற்கட்டுக்கள் யாவும் உடைந்த நிலையில், குப்பை கூளங்கள் நிறைந்ததாக அக்கிணறு காணப்பட்டது. பக்கத்தில் நின்று எட்டிப் பார்த்தேன். வயல் நிலங்களின் மத்தியில் உள்ள இக்கிணறு ஏன் தேடுவாரற்ற நிலையில் உள்ளது எனச் சிந்தித்தேன்.

"என்ன தம்பி யோசிக்கிறாய்?" என்று கிணற்றின் மத்தியிலிருந்து ஒரு குரல் கேட்டது. சுற்றும் முற்றும் பார்த்தேன். என்ன ஆச்சரியம்! எவருமே தென்படவில்லை. ஓகோ! கிணறு தான் பேசுகிறது என்று எண்ணினேன். "பயப்படாதே தம்பி! நான்தான், கிணறு பேசுகிறேன். ஏன் இப்படிக் கிடக்கிறேன் என்று தானே நீ யோசிக்கிறாய்? எனது கதையைக் கேட்க விரும்புகிறாயா? விருப்பமானால் சொல்கிறேன் என்றது. கிணற்றின் கதையைக் கேட்க எனக்கும் ஆசை உண்டாகியது. "சரி, சரி உன் கதையைக் கூறு பார்ப்போம்" என்றேன். கிணறு தன் கதையைக் கூறத் தொடங்கியது.

"தம்பி, இந்தக் கிராமத்திற்கு வயலூர் என்று பெயர். உனக்குத் தெரியுந்தானே! வயல்கள் சூழ்ந்த கிராமம். ஆனால் கிராமத்தில் உள்ள கிணறுகள் எல்லாம் உவர் நீர்க் கிணறுகள். இதனால் கிராம மக்கள் நன்னீர் பெறுவதற்குப் பக்கத்தில் உள்ள மகிழூர் கிராமத்திற்குச் செல்ல வேண்டியிருந்தது. இக் குறைப்பாட்டைப் போக்கும் பொருட்டு வயலூர்க் கிராமத்தில் வாழ்ந்த கொடை வள்ளல் முதலியார் சி. தியாகராசா நன்னீர்க் கிணறு ஒன்றைத் தோண்டுவதற்கு முன் வந்தார். இங்குள்ள வயல்கள் பல அவருடையவை. எனவே அவரது பெருமுயற்சியால் இந்த வயலின் ஓரமாகப் பல்லாயிரக் கணக்கான ரூபாக்களைச் செலவிட்டு என்னைத் தோண்டு

வித்தார். நீரைப் பரிசோதித்துப் பார்த்தார். நன்னீராயிருந்தது. மிக்க மகிழ்ச்சி கொண்டார். எனக்குப் பாதுகாப்பாக அடியிலிருந்து மேற்பகுதிவரை உட்பக்கமாகச் சீமெந்து பூசுவித்தார். மேற்பக்கமாக வட்டமாகச் சுவர் அமைத்துப் பாதுகாப்புச் செய்தார். மக்கள் தண்ணீர் அள்ளுவதற்கு வசதியாகப் படிக்கட்டுக்களை அமைப்பித்தார். கிணற்றங் கட்டின் இருபக்கமும் தூண் எழுப்பிக் குறுக்கே ஒரு தீராந்தியை வைத்து அதில் கப்பி ஒன்றையும் மாட்டினார். கப்பியில் கயிறு ஒன்றைப் பூட்டி அதில் வாளி ஒன்றையும் இணைத்து விட்டார்.

கிராம மக்கள் எல்லோரும் தினமும் என்னிடத்தே வருவர். நன்னீர்க் கிணறு என்பதால் மக்கள் என்னை நன்கு போற்றினார். எல்லோருக்கும் வேண்டிய நீரைக் கொடுத்து வந்தேன். எந்நேரமும் மக்கள் கூட்டமாகவே இருந்தது. ஒரே கலகலப்புத்தான்! எனக்கோ அளவிடமுடியாத பெருமை! ஊரையே வாழவைப்பது நான் தான் என்று பெருமைப்பட்டுக் கொண்டேன்.

கடந்த வருடம் கார்த்திகை மாதம் பதினைந்தாம் திகதி. எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. அன்று ஒரே மழை. வெள்ளம். கிராமம் முழுவதும் வெள்ளத்தில் மிதந்தது. மக்கள் தங்கள் இருப்பிடங்களை விட்டே வெளியேற நேரிட்டது. அகப்பட்டதை எடுத்துக் கொண்டு மேட்டுப் பகுதிகளைப் பார்த்து ஓட்டம் பிடித்தார்கள். யானும் வெள்ளத்தில் மூழ்கினேன். வயல் வெளிகள் கடல்போற் காட்சியளித்தன. என்னுடைய போதாத காலந்தான். இவ்வயல் வெளியால் வந்த ஒருவர் வரம்பென்று நினைத்து எனது மேற்கட்டில் ஏறியவர் "தொப்" பென்று என்னுள் வீழ்ந்து விட்டார். இறந்தே விட்டார். பல நாட்களாக அவரைத் தேடுவாரும் இல்லை. வெள்ளம் வடிந்தபின், பத்து நாட்களின் பின்னர் தான் கிராமத்தவர்கள் சடலத்தைக் கண்டுபிடித்தனர். பேய் தான் அவரைக் கிணற்றுள் தள்ளியிருக்க வேண்டுமென மக்கள் கதைத்தனர். நாளடைவில் எவரும் என்னிடத்தே வராமல் விட்டு விட்டார்கள். பேய்க்கிணறு போகாதீர்கள் என்று கிராம மக்கள் மத்தியில் பேசப்பட்டதாம். வருடம் ஒன்று கழிந்து விட்டது. எவரும் என்னிடத்தே தண்ணீர் மொண்டு செல்ல வருவதே இல்லை. ஆனால் வீடுகளில் கழித்து விடப்படும் கழிவுப் பொருள்களைக் கொண்டு வந்து கொட்டுகிறார்கள்.



போத்தல் ஓடுகள் போன்றவற்றையும் போடுகிறார்கள். தினமும் நூற்றுக்கணக்கானோருக்குக் குடிநீர் கொடுத்த யான் இன்று கழிவுப்பொருட்கள் போடும் இடமாக மாறிவிட்டேன். மக்கள் நடமாட்டமின்றி துர்நாற்றத்துடன் பேய்க்கிணறு என்ற பட்டத்துடன் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.

இதுதான் தம்பி உலகம்! நல்லாயிருக்கும் போது எல்லோரும் பயன்பெறத் தேடி வருவார்கள். கெட்டுப் போனால் எவருமே தேடமாட்டார்கள். யான் இதற்கு நல்லதோர் எடுத்துக் காட்டு. உன்னிடம் எனது கவலையைத் தெரிவித்தமையால் எனது வேதனை சற்றுக் குறைந்து விட்டது. போய் வா தம்பி" என்றது கிணறு. பாழடைந்த கிணறு கூறிய கதையைக் கேட்ட யான் அதற்கு நன்றி கூறிவிட்டு உதயன் வீடு நோக்கிச் சென்றேன்.



## கடிதத்தின் வடிவமைப்பு

........................(முகவரி)
......................................
......................................
..............................திகதி

விளிப்பு.....................................
.......................................

(உடல்) ..........................................................................................
..........................................................................................................
..........................................................................................................
..........................................................................................................
..........................................................................................................
..........................................................................................................

..............................(முடிப்பு)
......................................
..............................(ஒப்பம்)

ஒரு கடிதத்தில் பின்வரும் பகுதிகளைக்காண முடியும்.

1. அனுப்புபவரின் முகவரியும் திகதியும்
2. விளிப்பு 3. உடல் 4. முடித்தல்
6. ஒப்பம்

## கடிதங்கள்

❖ ஐந்தாம் வகுப்புப் புலமைப் பரிசிற் பரீட்சையிற் சித்திபெற்ற நண்பனைப் பாராட்டி ஒரு கடிதம் எழுதுங்கள்.

56

### பாராட்டுக் கடிதம்

10, புலவர் வீதி,
சுன்னாகம்.
19-2-2002

அருமை நண்பன் உதயனுக்கு,

நல்வாழ்த்துக்கள். சென்ற ஆண்டு நடைபெற்ற ஐந்தாம் வகுப்புப் புலமைப் பரிசிற் பரீட்சையில் நீர் சித்திபெற்றுள்ள செய்தியினை நண்பன் குமார் மூலம் அறிந்தேன். உள்ளம் மகிழ்ந்தேன். யாழ்ப்பாண மாவட்டத்தில் மிகக் கூடுதலான புள்ளிகளைப் பெற்று நீர் சாதனை நிலை நாட்டியுள்ளமையை அறிந்து என் உள்ளம் பூரிக்கின்றது. தங்களது இச் சாதனை தங்களுக்கு மட்டுமன்றி எங்களுக்கும் பெருமை அளிக்கின்ற தென்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

தங்களுக்கு என் உள்ளங்கனிந்த பாராட்டுக்களை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன். எதிர்காலத்தில் நிகழவுள்ள பரீட்சைகளிலும் சிறந்த சாதனைகளை நிலை நாட்டுவீரென எதிர்ப்பார்க்கிறேன்.

நன்றி

இங்ஙனம்
உனது நண்பன்,
சி. அருணன்.





❖ உங்கள் பாடசாலை மாணவர் மன்றத்தின் செயலாளர் என்ற முறையில் அறிஞர் ஒருவரை ஆண்டு விழாவுக்கு வருகை தருமாறு அழைப்புக் கடிதம் ஒன்று எழுதுங்கள்.

57

### அழைப்புக் கடிதம்

மாணவர் மன்றம்,
கொ./ இந்துக்கல்லூரி,
பம்பலப்பிட்டி,
கொழும்பு 4.
1-4-2001

பேராசிரியர் ஆ. சதாசிவம் அவர்கள்,
தமிழ்த்துறை,
கொழும்பு பல்கலைக்கழகம்,
கொழும்பு.

ஐயா,

எங்கள் மாணவர் மன்றத்தின் பத்தாவது ஆண்டு நிறைவு விழாவினை எதிர்வரும் புதன்கிழமை (10-04-2001) காலை 9.00 மணிக்கு சரஸ்வதி மண்டபத்தில் நடத்தவுள்ளோம். இவ் விழாவில் மாணவர்களின் சொற்பொழிவுகள், கலை நிகழ்ச்சிகள், பட்டிமன்றம், பரிசில் வழங்கல் ஆதியாம் நிகழ்ச்சிகள் இடம்பெறவுள்ளன.

இவ்விழாவில் முதன்மை விருந்தினராகக் கலந்து கொண்டு, பரிசில் வழங்கி உரையாற்றுமாறு தங்களை அன்புடன் அழைக்கின்றோம். இது தொடர்பான தங்கள் பதிலை எதிர்பார்க்கிறோம்.

நன்றி.

இங்ஙனம்
தங்கள் உண்மையுள்ள,
த. இளங்கோவன்
செயலாளர்.



58

## ❖ புத்தகசாலை அதிபருக்குக் கடிதம்

130, திருகோணமலை வீதி,
கண்டி.
2001-4-10

அதிபர்
ஸ்ரீ லங்கா புத்தகசாலை,
யாழ்ப்பாணம்.

ஐயா,

தங்கள் புத்தகசாலையின் பெயருக்கு இருநூற்றைம்பது ரூபாவுக்கான காசுக் கட்டளையினை (இலக்கம் 0736156) இத்துடன் அனுப்புகின்றேன். பின்வரும் நூல்கள் எனக்கு அவசியம் தேவையாகவுள்ளன. இவற்றை அஞ்சற் பொதிமூலம் கூடிய விரைவில் அனுப்பி வைக்குமாறு தங்களைப் பணிவுடன் வேண்டுகின்றேன்.

1. பாலர் பாட்டு - தொகுதி I
2. சிறுவர் கட்டுரைகள் - 6 ஆம் வகுப்புக்குரியது.
3. தமிழ்மொழி - செயல்நூல்
   6 ஆம் வகுப்புக்குரியது.
4. பாட்டுப்பாடுவோம்
5. சிறுவர் கதைகள்

நன்றி

இங்ஙனம்
தங்கள் உண்மையுள்ள,
சி. சிவோதயன்.





❖ உங்கள் பாடசாலைத் தமிழ்மன்றத்தின் மாதாந்தக் கூட்ட அழைப்பிதழ் ஒன்று எழுதுங்கள்.

59

## மகிழூர் மணிவாசகர் வித்தியாலயம்
## தமிழ் மன்ற மாதாந்தக் கூட்ட
## அழைப்பிதழ்.

காலம் : 2001-9-14 வெள்ளிக்கிழமை பி.ப. 2.00 மணி
இடம் : கலைமகள் மண்டபம்
தலைவர்: செல்வன். த. இளவழகன்
(மன்றத் தலைவர்)

### நிகழ்ச்சி நிரல்

1. தமிழ் வாழ்த்து
2. தலைவர் உரை
3. செயலாளர் அறிக்கை
4. பாட்டு : செல்வி ச. தமிழினி
   செல்வி க. கலைமகள்
5. பேச்சு : "இளமையிற் கல்"
   செல்வன். க. அன்பரசன்
6. கதை கூறல் : "ஒற்றுமையே உறுதி"
   செல்வி ப. தயாநிதி
7. நடனம் : ஏழாம் வகுப்பு மாணவிகள்
8. வில்லுப்பாட்டு : பத்தாம் வகுப்பு மாணவிகள்
9. நாடகம் : "துறவு"
   பதினொராம் வகுப்பு மாணவர்கள்
10. சபையோர் குறிப்புரை
11. தலைவர் நிறைவுரை
12. பாடசாலைக் கீதம்

***மாணவர்கள் அனைவரையும் அன்புடன் அழைக்கின்றோம்.***

வி. எழிலரசன்
தலைவர்

சி. தமிழழகன்
செயலாளர்



60

## ❖ பாடசாலை அதிபருக்கு ஒரு கடிதம்

"பாரதி இல்லம்",
28, புது வீதி,
நல்லூர்.
04-10-2001

பெருமதிப்புக்குரிய அதிபரவர்கட்கு,

வணக்கம். யான் கடந்த முதலாம் திகதி முதல் பாடசாலைக்குச் சமுகம் தரவில்லை. இம்மாதம் பத்தாம் திகதி வரை (10-10-2001) தொடர்ந்து சமுகம் தர இயலாத நிலையில் உள்ளேன் என்பதைத் தங்களுக்கு மிக்க பணிவுடன் தெரிவித்துக் கொள்கின்றேன். எனது சகோதரியின் திருமணவிழா இம்மாதம் பத்தாம் திகதி நிகழவிருப்பதே இதற்குக் காரணமாகும்.

இத்திருமணவிழா ஒழுங்குகளை மேற்கொள்வதற்கு யான் இரவு பகலாக உழைக்க வேண்டியுள்ளது. உற்றார் உறவினர் களுக்கு அழைப்பிதழ்கள் கொடுப்பது முதல் திருமணப் பந்தல், சோடனை வேலைகள் அனைத்தையும் கவனிக்க வேண்டிய வனாகவும் உள்ளேன். இதனால் பாடசாலைக்கு வர இயலவில்லை. தயவுசெய்து என்னை மன்னிக்குமாறு தங்களைப் பணிவுடன் வேண்டுகிறேன்.

தங்களுக்கும், ஆசிரியர்களுக்கும் இன்று எனது மாமா மூலம் அழைப்பிதழ்கள் அனுப்பியுள்ளேன். அவர் நேரில் அவற்றை ஒப்படைப்பாரென நம்புகின்றேன். யான் நேரில் தங்களைச் சந்தித்து அழைப்பிதழ்களை வழங்க முடியாமை குறித்து மனம் வருந்துகின்றேன். எனது நிலைமை தங்களுக்கு நன்கு தெரியும். எனது சகோதரியின் திருமணம் நிறைவெய்திய மறுதினமே பாடசாலைக்குச் சமுகம் தருவேன். தயவுசெய்து என்னை மன்னித்து லீவு வழங்குமாறு மீண்டும் பணிவுடன் தங்களை வேண்டுகிறேன்.

இங்ஙனம்,
தங்கள் பணிவுள்ள மாணவன்,
சி. சிவபாலன்.

